*Kumaraṉ*

*Āram 10, muttu 3*

*September 01, 1932*

Record no. 313

REG. NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY.

வாரப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு-வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

மாதப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 1-4-0
ஆடி மீ வருஷ
ஆரம்பம்.

வியாழன்தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 10. | காரைக்குடி, ஆங்கீரச-ஹு ஆவணி-மீ கஎ-உ (1—9—32.) | முத்து 8.

## கண்ணுதலாரின் தமிழ்ப்பரிவு.

(வி. பரமசிவம்.)

மனிதன் பரிணாம விதிக்கு இலக்காகி ஒவ்வொரு துறையிலும் வளர்ச்சியடையும் காலத்து பரிணாம விதி இலக்கணப்படி அவனது சிந்தனை சக்தியும் பெருக்கெடுக்கலாகின்றது. மட்டற்ற முறையில் பெருகி வளரும் சிந்தனை சக்தியை எம்முறை கொண்டாகிலும் அவன் வெளிப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தத்திற் குட்பட்டுவிடும் காலத்து அதற்கு அனுசணையாக அவனுக்கு "மொழி" உபயோகப்படுகின்றது.

மேலும் மக்கள் தங்களுக்குள்ளே ஒரு வகையான கூட்டுறவைக் கொள்ளுங்காலத்து ஒருவர்க் கொருவர் அபிப்பிராயங்களை வெளியிடவேண்டிய அவசியத்திற் காட்படுகின்றனர். இந்நிலையில் அவர்கட்கு "மொழி" யிக்கதொரு இன்றியமையாப் பொருளாகி விட்டமை காண்க.

மனிதன் முதலிலே தன்னுடைய சிறு தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் அளவிலே மட்டும் சிற்சில சொற்களைக் கண்டு தெரிவிக்கின்றான். பின்னர் நாளாவட்டத்தில் மனிதன் ஒவ்வொரு துறையிலும் எத்தனை தூரம் முற்போக்கடைந்துளான் என்பதற்கேற்ப மொழியையும் வளர்த்துக் கொள்கின்றான். ஆகவே மனித வளர்ச்சியின் சரித்திரம் முழுவதிலும் நமது கவனத்தைச் செலுத்தி ஆராயும் பொழுது, இந்த நாடு மட்டிலு மன்று; இந்த உலக முழுவதுமே ஒருவகை ஒற்றுமைப் போக்கிலே தான் வளர்ந்து வந்திருக்கிறது.

ஆகவே சுருக்கமான இந்த எடுத்துக் காட்டிலிருந்து மனிதத் தொகுதிக்கும் மொழிப் பெருக்கத்துக்கும் உள்ள அடர்ந்த சம்பந்தத்தை நாம் ஒருவாறு உணரலாகும்.

மனித வாழ்க்கையின் அவசியங்களைப் பூர்த்தி செய்கின்ற அம்சத்திலே மொழி தலை சிறந்திருக்கின்றதென்பதைத் தெளிவாக உணரும் பொழுது மொழி மனிதனாலும் மனிதன் மொழியினாலும் வளர்கின்றான் என்ற உண்மை மறுப்பற்றதாகி விடுகின்றது. தன்னுடையதேவைகளைப்பூர்த்தி செய்யும உரிமை தனக்கே (மனிதனுக்கே) உண்டென்பது பொது உண்மையல்லவா? அங்ஙனமாயின் மொழியை வளர்ப்பவனும் அவனே யன்றோ?

இதை மறுபடியும் மறுபடியும் வற்புறுத்துவதன் காரணத்தை தமிழ் நேயர்கள் சிறிது கவனிக்க வேண்டும். நான் மேலே கூறிய உலக இயற்கைக்கு மாறாக, நமது தமிழ் மொழியானது சிவபெருமானால் தோற்றுவிக்கப்பட்டது என்ற எண்ணம் சர்வ சாதாரணமாகி விட்டது.

ஆனால்இவ்வாறுகூறுவதிலேஉண்மையே இல்லாமற் போய்விட வில்லை. தமிழணங்கின்பால் கரைகடந்த காதல்பெருகிய நமது தமிழர் உள்ளத்திலே தமிழைச் சிறப்பிக்க வேண்டுமென்ற பெருவிருப்பம் வலிபெற்றதந்த, அதன் பயனாக எல்லாம்வல்ல இறைவன் ஒருவனால் இஃது இயற்றப்பட்டது என்று கூறுவதினால் தமிழ்மொழிக்குப் பெருமை அதிகமாகும் என்று கருதினர் போலும்!

உலகத்தில் பொதுவாக ஒரு மொழியைப் பெருமைப்படுத்த நினைப்பவர்கள் என்ன செய்ய வேண்டும், என்ன செய்தார்கள், என்ன செய்கின்றார்கள் என்பதைக் கவனித்துவிட்டு, நமது தமிழ் மக்கள் நமது தாய்மொழியாகிய தமிழைப் பெருமைப்படுத்த என்னசெய்கின்றார்கள் என்பதையும் கவனித்தால், ஒரு சிலர்க்கு நகைப்பும், ஒரு சிலர்க்கு வியப்பும் உண்டாமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை. தமிழைப் பெருமைப்படுத்த எந்த உபாயத்தை இவர்கள் கைக்கொண்டார்களோ அஃது தமிழை இழிவுபடுத்தியதோடு நலிவுறுத்திய தென்பதையும் நாம் மறைக்க முடியாது.

தமிழைச் சிவபெருமான் இயற்றினார் என்பதின் மூலம் தமிழுக்குப் பெருமை கொடுத்தார்களென்று சொன்னேனல்லவா? இவ்வபிப்பிராயத்திலே தமிழர்கள் எவ்வளவு வலியுடன் இருக்கின்றனரென்பதற்கு ஓர் உதாரணம், ஒரு விஷயத்தைப் பற்றிப் பழமொழியோ பாட்டோ சட்டப்பட்டுவிட்ட தென்றால், அவ்விஷயம் முற்றும் உறுதியான தென்பதற்கு அப்பாடல்களே ஆதாரமாம்! தங்கள்மனத்தகத்தே அவ்வெண்ணம் உண்மையென்று நிலைபெற்று விட்டதென்பதற்கும் அக்கருத்தை வலியுறுத்தும் பாக்களே சான்றாம்! அது போல் தமிழ்மொழியைச் சிவபெருமானியற்றினா ரென்பதில் தமிழர்கள்—சிறப்பாகத் தமிழ்ப்புலவர்கள்—எவ்வளவு ஆழ்ந்த அபிப்பிராயம் கொண்டிருக்கின்றன ரென்பதைக் கீழ்க்காணும் பாக்கள் வலியுறுத்தும்.

"தழற்புரை நிறக்கடவு டந்த தமிழ்
தந்தான்"—கம்பன்

* * *

விடையுகைத் தவன் பாணினிக்
கிலக்கணம் மேனாள்
வடமுறத் தியம் மொழிக்கெதி
ராக்கிய தென் சொல்"
—பரஞ்சோதி முனிவன்

* * *

"வடமொழியைப் பாணினிக்கு
வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை
உலகமெலாந் தொழுதேத்தக்
குடமுனிக்கு வலியுறுத்தார்
கொல்லேற்றுப் பாகரெனில்
கடல்வரைப்பி லிதன் பெருமை
கணித்தறிவார் யாவரே"
—காஞ்சி புராணம்

* * *

இருமொழிக்குங் கண்ணுதலார்
முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார்
முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியுமான்றவரே
தழீஇயனா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு
மிதற்கைய முளதேயோ?
காஞ்சிப் புராணம்.

* * *

மறைமுதற் கிளர்ந்த வாயன்
மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
இலக்கணஞ் செய்யப் பெற்றே
பறைகடல் வரைப்பிற் பாடை
யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த் தெய்வத்தை
யுண்ணினைந் தேத்தல் செய்
[வாம்.
—கோயிற் புராணம்

* * *

தமிழ் மொழியை சிவபெருமான் உண்டாக்கியதோடு தமிழ்க் கழகத் தமர்ந்து தமிழாராய்ந்தா ரென்றும் பல தமிழ்ச் செய்யுட்களை இயற்றியுள்ளா ரென்றும் தமிழர் புராணங்கள் கூறும். சிவபெருமான் உண்டாக்கிய தென்ற காரணம் எவ்வளவு தூரம் வலி பெறுகின்ற தென்பதையும், இதனால் தமிழர் கருதுகின்றபடி தமிழ் மொழிக்குப் பெருமையுண்டாகுமா என்பதையும், மற்ற மொழி நிலை உண்மைகளின் உதவி கொண்டு ஆராய்வேன்.

பொதுவாக பூவுலகம் முழுதையும் கடவுளே படைத்தார் என்று கூறுவதிலே சற்றும் இணையாத மனப்பான்மை புடையவர்கள், ஒரு மொழியையும் அவரே ஆக்கினார் என்று கூறுவதிலே வியப்பொன்றுமிலது. பூதத்துவ சாஸ்திரத்தைத் அருவித் அருவி ஆராய்ந்து உண்மை காண்கின்ற இத்தக் காலத்திலே இத்தகைய அறியா மனப்பான்மைகளுக்கு எத்தகைய ஸ்தானம் கிடைக்கும் என்பதைப் பற்றி நாம் கூறவேண்டிய அவசியமே இல்லை.

ஆராய்ச்சியும் பகுத்தறிவு விளக்கமும் கரை புரண்டோடுகின்ற இந்தக் காலத்திலும், மேற் கூறிய பிடிவாதங்களை அனுப்பி விடாமல் இறுகத் தழுவி இன்புறும் மக்கள் இருப்பது அறியாமையின் ஆணிவேர்ப் பலத்தை யன்றோ காட்டுகின்றது. மற்ற பாஷைகள்எல்லாம் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டது. ஆகவே அவை தாழ்ந்தவை என்றும், தமிழும் ஸமஸ்கிருதமும் இறைவனாலே செய்யப்பட்ட காரணத்தால் உயர்ந்தன வென்றும் கூறும் பொழுது இன்னும் இரண்டொரு சம்பிரதாயங்கள் அடிபடுவதைக்காணலாம். பொதுவாக உலகம் அனைத்தும் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது என்று கூறுகின்றார்களல்லவா? உலகமனைத்துக்கும் தந்தையாகவும் தாயகனாகவும் உள்ள கடவுள் மற்ற மொழிகளையெல்லாம் செய்யாமல் தமிழ் மொழியை மட்டும் செய்ததினால் என்று கூறுவது பொருத்தமாகுமா? விருப்பும் வெறுப்பும் நீங்கியவராகக் கருதப்படும் கடவுளிடத்தில் ஒரு தலைச்சார்பான குணம் இருத்தல் அவரது புனிதத்தன்மைக்கு மாசுண்டாக்குவதாகுமல்லவா?

எல்லா உலகத்தையும் படைத்த கடவுள் எல்லா பாஷைகளையும் படைத்துக் கொடுப்பதன்றோ நியதி? அங்ஙனமின்றித் தமிழை மட்டும் படைத்தாரென்றால் தமிழரிடத்து அவர்க்கு அதிக அன்பென்பது கருத்தா? அல்லது தமிழர்கள் மையோ காதவர்களென்று எண்ணமா?

அதுவல்லாமல்மனிதனால் உண்டாக்கப்பட்ட மற்ற மொழிகளுக்கும், கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட தமிழ் மொழிக்கும் வித்தியாசமேதாவது புலப்படுகின்றதா? சிறிது ஆராய்ச்சியுடன் கூறினால் தமிழ்மொழி குற்றமிரா வன்றோ இருப்பதாகத் தோன்றுகின்றது! மனிதனால் படைக்கப்பட்ட மற்றை மொழிகள் செழித்துக் கொழுத்துப் புஷ்டிகுத்து வளர்ந்து செல்ல, எல்லாம் வல்ல இறைவனால் இயற்றப்பட்ட எம்மொழி வழக்கழிந்து சாகும் நிலைக்கு வரக்காரணமென்ன? இதனால் மனிதனைக் காட்டிலும் கடவுள் ஆற்றல் குறைந்தவ ரென்று கருதுவதா?

மேலும், சிவபெருமானுக்கு மற்றை மொழிகளைக் காட்டிலும் தமிழினிடத்து அன்பும் அதிகமென்று கூறுவர் தமிழ்ப் புலவர்.

கெக்கலின் பெருகண்டனும்
தொன்நிலை நோக்கி
அடுக்க வந்துவத் தாவோ
ருடலி னிளைப்பு
விடுக்க வாரமென் கால் திரு
முகத்திடை வீசி
மடுக்கவுந் தமிழ் திருச்செவி
[மாந்தவு மன்றோ.

என்று பரஞ்சோதி சுவாமிகள் கூறுவதை நோக்கும் பொழுது சிவபெருமான் தமிழிடம் கொண்ட ஆர்வம் தெளிவாகின்ற தல்லவா! மற்றை மொழிகள் போலாது தமிழைப் படைத்த சிவபெருமான் தமிழினிடம் நீங்காத காதல் கொண்டிருக்கின்றா ரென்பது தெளிவாகும் பொழுது தமிழ் சீர்கேடடைந்து தவிப்பது காரணம் யாது கொண்டென்பது புலனாகவில்லை. சிவபெருமானின் சக்தியின்மையை இவைகள் காட்டுகின்றனவா அல்லது புலவர்களின் பொய்ப் பெருக்கை விளக்குகின்றனவா என்பதைத் தமிழர் ஆராய்ந்து தெளிக.

எல்லாம் "அவனருள்" என்ற எண்ணத்தில் மனித சக்தியை நிமிஷத்துக்கு நிமிஷம் பாழ் செய்துவரும் நம்மக்கள் மொழியையும் சிவபெருமானிடம் அடைவு வைத்து அருள்பெறவிழைந்திருப்பது ஆச்சரிய மன்று. இந்த "பரிதாபத் தன்மை" அவர்களுடைய உடன் பிறப்பாகும். சிவபெருமானால் தமிழுக்குப் பெருமை புண்டாகுமென்று கருதிய தமிழர் தமிழ்த் தாழ்வு தேடியதை அவர்களால் உணரமுடியவில்லை போலும்! மனிதப் பிரயத்தினத்தாலேயே உணரவேண்டிய ஒரு பொருள் அது வல்லாத ஒன்றால் எங்ஙனம் முன்னேறும்?

---

பாமறிந்த மொழிகளிலே தமிழ்
மொழி போல்
இனிதாவ தெங்கும் காணோம்,
பாமரராய், விலங்குகளாய்,
[உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழ ரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலக மெல்லாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்.
—ஸ்ரீ பாரதியார்

## பொறுக்குமணிகள்.

நமது சூரியனின் குறுக்களவு 1 கோடி 90 லட்சம் மைல்களாம்.

0 0 0

கம்பியில்லாத்தந்தியின் மின்சாரம் ஒரு செகண்டில் 1 லட்சத்து 86 ஆயிரம் மைல் வேகத்தில் செல்கின்றது.

0 0 0

ஒரு நல்ல ஞாரதர்சினிக் கண்ணாடி வழியாக ஒரு அங்குலத்தின் 1 கோடி 60 லட்சத்தின் ஒருபகுதியைக் கூடவும் தெளிவாகக்கண்டுகொள்ளகூடும்.

0 0 0

அமெரிக்காவிலுள்ள லாஸ் ஏஜ் சல்ஸ் என்ற இடத்தில் வாழும் வேலை கிடைக்காத 15 பேர்கள் சமீபத்தில் தங்களையே ஏலத்தில் விற்றுக்கொண்டார்களாம்.

0 0 0

தவளைகளில் பறக்கும் ஜாதியொன்றிருக்கிறது. அது பறக்கும்போது அதன் அடிபாகம்—அதாவது வயிறு கால்கள் பாதங்கள் முதலியன—பாம்புப்படம் போல் அகன்று தோற்றும்.

0 0 0

குல்நா ஜில்லாவிலுள்ள துலக்ராம் என்ற விடத்தில் ஒரு பாம்பு முட்டையிடுவதற்குப் பதிலாக ஒன்றின்பின் ஒன்றாய் பல குஞ்சுகளை ஈன்றது. பலர் இதனை நேரில் பார்த்ததாகத் தெரிகிறது.

0 0 0

தர்மாவரம் தாலுகாவிலுள்ள ஓர் எருது பசுவைப்போல் பால் கொடுத்துவருகிறது. அதிலிருந்து ஒரு வேளையில் கிடைக்கும்பால் அரைச் சேராம். அந்தப்பால் பசுவின் பாலைப்போல் உருசிகரமாயிருக்கிறது.

0 0 0

கடந்த மகாயுத்தத்தில் சோம் நதிக் கரையில் 73000 பிரிட்டிஷ் சோல்ஜர்களும் ராணுவ வீரர்களும் மடிந்தனர். அவர்கட்கு இப்போது ஒரு ஞாபகச் சின்னம் அமைக்கப்பட்டிருக்கின்றது.

0 0 0

நாங்கில் புழுவில் "பன்றியிரை" யென்ற ஒருவகை யிருக்கின்றது. அதன் நீளம் சாதாரணமாக 1 அடி முதல் ஒன்றேகால் அடி வரையிலுமிருக்கும். அது ஊர்ந்து போகும் போது சில கால் 2 அடி வரையிலும் நீளுவதுண்டு.

0 0 0

இந்தியா, அமெரிக்காவிலிருந்து புகைபிடிக்கும் வழக்கத்தைக் கற்றுக்கொண்டது. அமேரிக்காவிலுள்ள வர்ஜீனியா தேசப்புகையிலையேசிகரெட்டுகட் சேற்றவையாம். குண்டூர் ஜில்லாவில் ஏராளமாக வர்ஜீனியா புகையிலை பயிரிடப் படுகின்றது.

0 0 0

தன்னுஸ்திையைத் தன்னுடன் கொண்டு பரலோகம் செல்ல நினைந்த ஒரு லையான்ஸ் ஹோட்டல் காரன் பதினாயிரம் பவுன் மதிப்புள்ளதாகிய பாங்க் நோட்டுகளைத் தின்று விட்டான். இதேபோல ஓரிள நங்கையும் 20 பவுண்டு கோட் டொன்றைக் கிழித்து ரொட்டியுடன் சமைத்துச் சாப்பிட்டு விட்டாள்.

0 0 0

இங்கிலாந்து பாடிங்டனில் மேட்கின்னெலி என்னும் 50 வயதுடைய ஒரு நர்சுக்கு ஒருவிதமான என்பு நோய் கண்டிருந்தது. அது அவளுடைய உயரத்தை நாளடைவில் குறைத்துக் குறைத்துக் கடைசியில் கொன்றுவிட்டது. நோய் பிடிக்கும் போது கின்னெலியின் உயரம் 6 அடி; இறக்கும்போது உயரம் 5 அடி.

---

## துண்டுத் துணுக்குகள்.

(குள்ள நரி.)

இங்கிலாந்தில் மாத்திரம் வருஷமொன்றிற்கு 15 ஆயிரம் டன் மிளகு உபயோகிக்கப் படுகின்றது.

ஆகையினலேதான் ஆங்கிலேயர் காரசாரமுடையவர்களாயிருக்கின்றார்கள் போலும்.

0 0 0

ஆப்ரிக்காவில் ஒருவித எறும்புகள் மழை பெய்யும்போது இலைகளையும் புஷ்பங்களையும் குடைகளாகப் பிடித்துக்கொண்டு போகின்றன.

ஐயோ! எறும்புக்கிருக்கும் உணர்ச்சி கூட நம் நாட்டுப் பெண்களுக்கிருப்பதில்லையே! பரிதாபம்!! பரிதாபம்!!!

0 0 0

ஏழையே யாயினும் பணக்காரனேயாயினும்மனிதனின்உடலின் சரியான விலை 4 ஷில்லிங் தானும்.

அப்பப்பா! சிலகால் ஒருவர் உடைக்கப்பட்டால் நம்மைப்போல் 4 உருப்படிகள் செய்யத் தகுந்த பருமனிருக்கின்றார்களே அவர்கள் கூடவா 4 ஷிலிங்?

0 0 0

நாகபுரி போலீஸ் சூப்பரிண்டென்ட் வீட்டிலிருந்து ஒரு கைத்துப்பாக்கி களவு போய்விட்டது.

இது உண்மையானல் நாகபுரி போலீசார் எதற்கிருக்கின்றார்கள் என்பது வெளியாகின்றதல்லவா?

0 0 0

காலி போர்னியா ஆராய்ச்சிக்காரரொருவர் புது மாதிரியமான இயந்திரம் ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறாராம். அந்த இயந்திரத்தைக்கொண்டு சூரிய கிரணங்களைக்கிரகித்து அக்கிரணங்களின் உஷ்ணத்தினலே சமையல் செய்து விடுகிறார். மாமிசங்களையும் வெகு நன்றாக அவ்வுஷ்ணத்தைக் கொண்டே சமைத்து விடுகிறார். 450 மைல் தூரத்திற்குக்கூட தன்னுடைய புது இயந்திரத்தின் சகாயத்தால் வெளிச்சத்தை அனுப்ப முடியுமென்று கூறுகிறாராம்.

ஆ! இவர் விறகுக் கடைக்காரர்களின் தொழிலுக்கு உலைவைத்து விட்டாரே.

0 0 0

முஸ்ஸோரியிலுள்ள 10 வயதான ஒரு பள்ளி மாணவன் 6 அடி 10 அங்குல உயரமிருக்கின்றான். அவன் உடலின் எடை 238 பவுன். அவனுக்கு 5 சதுர அடியுள்ள தோலில் 2 அடி நீளத்தில் பூட்ஸ் தைக்கப்பட்டது.

வகுப்பில் ஆசிரியர் இவனை பயமின்றித் தண்டிப்பாரா?

0 0 0

சர் ஆர்தர் கெய்த் என்பவர் சமீபத்தில் நிகழ்த்திய ஒரு சொற்பெருக்கில் குறிப்பிட்டதாவது:—

மனிதர்கட்குத் தேவையானதை விட 10 பங்கு அதிகமான மூளை கொடுக்கப்பட்டிருக்கின்றது. மிகச் சொற்பமான மனிதர்களே தங்கள் மூளையில் பாதியை யேனும் உபயோகிக்கின்றார்கள். ஏனையோர் சாதாரணமாகப் பத்தில் ஒரு பாகத்தையே உபயோகிக்கின்றார்கள்.

இதனுலேயே பேச்சு வழக்கில் "மூளையைக் கடங்கொடுக்கிறது" என்ற சொற்றொடர் உபயோகிக்கப் படுகின்றதோ?

0 0 0

உருளைக் கிழங்கைப் பயிரிடுவோர் அதிக ஜாக்கிரதையாக இருப்பாராகில் ஒரே உருளைக் கிழங்கைக் கொண்டு 10 வருஷத்திற்குள் 1000 கோடி உருளைக் கிழங்கு உற்பத்தி செய்ய முடிகிறது.

ஒரு மனுவிலிருந்து 165 கோடி மனுஜர்கள் (மனிதர்கள்) உற்பத்தியாகியிருக்கிறார்களல்லவா? அது போல.

0 0 0

புரி ஜகந்நாதம் என்று இந்துக்கள் வியந்தேதும் திருப்பதியிலுள்ள ஜனங்கள் அவ்வூரில் வாழுங்காரணம் கொண்டே மோக்ஷலோக மடைந்துவிடுவரென்றுகூறப்படுகின்றது; என்றாலும் அத்திருப்பதியில் யானைக்கால் வியாதி அதிகமாகக்காணப்படுகின்றது என்று ஒரு நிருபர் வியப்புறுகின்றார்.

யானைக்கால் வியாதி அல்லது வேறு ஏதாவதொரு வியாதி ஏற்பட்டால் தானே மோக்ஷத்துக்குப் போக முடியும்.

0 0 0

ஆமதாபாத் முனிசிபாலிடியார் மாணிக் சவுக்கம் என்ற இடத்தில் விதேசத் துணிகளை சேமித்து வைக்கவோ, விற்கவோ செய்யாத வரையில் ஒரு வருஷத்திற்குத் தங்களுக்குச் சொந்தமான கடைகளை வாடகைக்கு விடமாட்டார்களென்று விளம்பரம் செய்திருக்கின்றார்கள்.

இந்த விளம்பரம் விதேச ஜவுளியைப் பெருக்குவதா? அல்லது முனிசிபல் வருமானத்தைச் சுருக்குவதா?

0 0 0

மேல்நாடுகளில் விவாகம் செய்து கொண்டவர்களுக்கு விவாகமான முதல் வருடமும் 15 வருடத்திற்கு மேல் 20 வது வருடத்திற்குள்ளுமே அதிகமான சங்கடங்க ளேற்படுகின்றனவென்று ஒரு பிரபல ஆங்கில பாரிஸ்டர் கூறுகிறார். அங்கு நடக்கும் விவாகரத்துகளை ஆதாரமாகக் கொண்டே இப்பாரிஸ்டர் இம்முடிவிற்கு வந்திருக்கிறாராம்.

ஏன் இரண்டு தருணங்களில் சங்கடமேற்படுகின்றதென்பது புலப்படவில்லை. ஒருகால் முதல் வருடம் ஏற்படுகின்ற சங்கடம் புருஷனும் பெண்ணும் முதன் முதலாகப்பழகத் தொடங்கும் காலமானது பற்றிப் போலும். அப்படியானல் 15-வருஷத்துக்கும் 20-வருஷத்துக்கு மிடையில் ஏற்படுகின்ற சங்கடம் அதிகமாக பழகி விடுவதனுல் ஏற்படுவதாயிருக்கலாம்.

0 0 0

போல்ட்டன் என்ற ஊரில் எவருக்கும் தாடிமயிர் வளருவதேயில்லையாம். தலை உரோமம்கூட 6 வாரத்துக்கு ஒருமுறையே கத்தரித்துக் கொள்ள வேண்டியிருக்கிறதாம்.

அப்படியானல் திருப்பதிக்கு தலைமயிர் வளர்க்கிற இந்துக்கள் சாயம் அங்கு பலியாது போலும்.

0 0 0

இங்கிலாந்தில் 16 வயதுடைய ஒரு பெண் இலேசுமேலசாக மாற்றமடைந்து ஆணுனாள். அப்போது தாடிமீசைகளும், க்ஷவரமும், தொனி வேறுபாடும் காணப்பட்டன. ஆனல் மீண்டும் எக்காரணம் பற்றியோ மாற்றமடைந்து பெண்ணாகிவிட்டாள். ஆகவே அவள் எடுத்த பிறவி மூன்று.

நமது நாட்டுப் பார்ப்பனர் தங்களை இரு பிறப்பாளரென்று காரணம் காட்டி பெரியவர்களாக்கிக் கொள்கின்றார்கள். இப்பெண் மூன்று பிறப்பு எடுத்திருக்கின்றாள்; எனவே இவள் பார்ப்பனர்களைவிட உயர்ந்தவளல்லவா?

---

## விகடத் துணுக்குகள்.

மனைவி செய்த தவறுக்காகக் கோபித்துக் கொண்ட ஒருவன் அவளை நோக்கி:—குறிப்பிட்ட காலத்துக்குள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளாவிட்டால்...............

மனைவி:—கேட்காவிட்டால் என்ன செய்வாய்?

கணவன்:—இன்னும் வாய்தாவை மாற்றுவேன்.

0 0 0

தொழிலில்லாது கஷ்டப்படுகிறவனைப் பார்த்து ஒரு நண்பர்:—ஏன் நீர் இரவு தூங்காது படுக்கையினருகில் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்?

தொழிலில்லாதான்:— இரவில் வேலைக்கு யாராவது வந்தழைத்தால் உடன் செல்லலாமல்லவா?

0 0 0

விரல்களை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு குழந்தை:—அம்மா! என் விரல்களுக் கெல்லாம் சமமான வயதாயிருந்தால் ஒன்று சிறிதாகவும் இன்னென்று பெரிதாகவுமிருக்கக்காரணமென்ன?

0 0 0

ஒரு பல் டாக்டரிடம் சென்று புதிய பற்களை கட்டிக்கொண்ட ஒருவர் டாக்டருக்கு நீண்ட நாளாகப் பணம் கொடுக்கவில்லை. ஆகவே டாக்டர் அடங்காத கோபம் கொண்டு ஒரு நாள் அவருடைய பற்களை பிடுங்கியெடுத்துக் கொண்டார்.

0 0 0

மழைநேரத்தில் ஒரு கொட்டகைக்குள்தேசியப்பிரசங்கம் நடைபெற்ற போது பேசுபவர்:—இவ்வளவு பெரிய கூட்டம் கூடியிருப்பதால் தேசிய உணர்ச்சியின் விஸ்தீரணம் நன்றாக வெளிப்படுகின்றது.

கூட்டத்திலிருந்த ஒருவர்:—பலர் மழைக்காகவந்தே ஒதுங்கியிருக்கிறார்கள். அதிலிருந்து குளிர்ச்சி விஸ்தீரணத்தின்வலியொன்றே வெளிப்படுகின்றது.

0 0 0

ஒரு பிரசங்கி சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கும்போது தம்மையொருயௌவனப்பெண் கூர்ந்து ஆர்வத்துடன், கண்ணடையாது பார்த்துக் கொண்டிருப்பதைக்கண்டு ஓர் உதாரணம் கூறுகின்ற போது:— நல்லது; நான் ஒரு கமலத்தைப்பார்த்துக் கொண்டிருக்கின்றேனென்று வைத்துக் கொள்வோம்.

அப்பெண் (மெய்ம் மறந்து):— நன்றாகப் பாருங்கள்; ஆனல் என் பெயர் கமலமல்ல.

0 0 0

"நான் பாடுந்தோறும் அவன் அழுதுகொண்டே யிருக்கின்றான்"

"ஆ! அப்படியா? நான் உன் பாட்டுக்குப் பக்கப் பாட்டென்றல்லவா நினைத்தேன்."

0 0 0

ஆடவன்:—மௌனம் சர்வார்த்த சாதகம்.

பெண்:—புருஷர்கட்கு மௌனம் சர்வார்த்த சாதகமாயிருக்கலாம். ஆனல் பெண்கட்கு "மௌனம் சர்வானர்த்த சாதக" மாகும்.

0 0 0

தந்தை:-உன்னுடைய ஒரே குறி எல்லோரையும் மகிழ்விப்பதாயிருக்க வேண்டும்.

புதல்வன்:—அப்படியானல் கொஞ்சனுள் குமிபார்த்துச் சுடப் பழகிக் கொள்கிறேன்.

0 0 0

தன் புதல்வனை இழந்து விட்டஒரு வயோதிக ஸ்திரீ ரயிலிலுட்கார்ந்து அழுது கொண்டே:—ஆ! இந்த அபாயத்தை யாரிடம் தெரிவிப்பேன?

பக்கத்திலிருந்த ஒரு விகடன்:— இதோ இந்த அபாய அறிவிப்புச் சங்கிலியை இழு. உன் விஷயத்தைச்சொல்லலாம்.



## சொர்ன வல்லி.

(கூழைரங்கன் இரண்டாம் பாகம்.)

காத்தான் செட்டியாருக்குப் புத்தி சுவாதீனப் படவில்லை. அடுத்தாள் கடை வேலைகளைக்கவனித்தார். இப்படிப்பட்ட நிலைமையில் சாமியார் வந்து சேர்ந்தார். செய்திகேட்டு வருந்தினர். இருந்தாலும் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு காத்தான் செட்டியாருக்கு சமாதானம் சொல்லித் தெற்றினர். "திடீரென்று மாணிக்கம் தற்கொலைசெய்துகொண்டு இறக்க வேண்டிய அவசியமென்ன?" என்ற கேள்வி சாமியாரின் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது. பணக்கஷ்டம் இயல்பாகவே இருந்ததுதானே! திடீரென்று ஒன்றும்வந்துவிடவில்லையே என்று கருதும் போது அது இதற்குக் காரணமாக இருக்குமா என்ற சந்தேகம் சாமியாருக்கு வராமலிருக்குமா? எப்படியும் சந்தேகந்தான் வலுத்ததேயன்றி உண்மையொன்றும் வெளிப்படவில்லை. சாமியாரையும் அருகில் வைத்துக்கொண்டு பின்வருமாறு ஒரு கடிதத்தை வையாபுரி செட்டியாருக்குக் காத்தான் செட்டியார் எழுதினர்:—

உ

சிவமயம்

யவுக்மியா ஊர்

மா. வ.

ருத்ரோத்காரிஞ வைகாசிமீ எஉ வையாபுரி செட்டியாரவர்கள் தம்பி காத்தான் செட்டி யெழுதிக் கொண்டது. தெண்டாயுதபாணி கிருபாகிடாச்சத்தினலே யிப்போது யிப்பவும் இவடஞ் சேதிக்கி யிது கடதாசியும் முன்மீ உஎஉ க்கடதாசியும் முன்மீ குரிப்பு நகலும் வந்து சேரச் சேதியுந் தெரிய வருமே. அவடஞ் சேதிக்கி யெழுதியனுப்பி வைக்க வேண்டியது. யிப்பவும் நம்மள் மாணிக்கமும் ஒரு தாக்கலும் சொல்லாமல் முதல் தேதி ராத்திரி யெங்கையோ போய்விட்டான் ஆகையினலே விடிந்து பார்த்ததில் எம்பிடவில்லை. எங்குந்தேடியும் குளம்கிணரெல்லாம் சோதிச்சும் தேடினேம். எம்பிடவில்லை. அப்பரம் ரெங்கோனிலிருந்து நம்மள் மாணிக்கம் கைப்பட ஒரு கடதாசி வந்தது. அதன்மேல் ரங்கோனுக்குப் போய் யெவ்வளவு தேடியும் எம்பிடவில்லை. ரெம்பக்கவலையாயிருக்கிறது. ஷெ யான் யெழுதிய கடதாசி யித்துடன் வருகிறது. மைற்ற சேதிக்கிப் பின்ம்பு. வேணும்.

அண்ணுமலையார் துணை.

இக்கடிதத்தை சாமியாரும் பார்த்தார். மடித்துத் தபாலில் சேர்த்து விட்டார்கள்.

### இரண்டாம் அத்தியாயம்.

### காசியாத்திரை.

செல்வராஜ புரத்திலுள்ள ஜனங்கள் பெருங் கிளர்ச்சியினுள் அகப்பட்டிருக்கிறார்கள். உலகத்தில் நடவாத பெரிய காரியங்கள் நாளை நடக்கப்போகிறதாகப் பலரும் கூடிக்கூடிப் பேசுகிறார்கள். வயதானவர்கள் "இதென்ன அநியாயம், காலங் கெட்டுப் போச்சு"என்று சொல்வது சாதாரணமாக வீதியில் நடப்பவர் காதுகளில் விழுகிறது. வாலிபர்கள் உற்சாகமாக வேலை பார்க்கின்றனர். சுத்த நீர்த்தடாகத்துக் கருகிலுள்ள பெரிய பொட்டலில் அழகான அலங்காரக் கொட்டகை போடப்பட்டிருந்தது. அதில் 1000 ஜனங்கள் தாராளமாக இருக்கலாம். வாலிபர்கள் பலர் அங்கிருந்து சுறுசுறுப்பாக வேலை செய்கின்றனர். வயதான சிலரும் இருந்து தென்னேலைக் கூந்தல் பின்னிக்கொண்டிருக்கின்றனர். இரவு முழுமையும் வேலை நடக்கிறது. அடுத்த நாள் குழந்தை வடிவேலன் செந்தமிழ்க் கலாசாலை ஆண்டுவிழாவாகும். கலாசாலை ஆண்டுவிழாவென்றாலே அவ்வூர் ஜனங்கள் பெரும் உற்சாகமடைவார்கள். வாலிபர்களும் மகாகவிப் புலவரும் அதில் ஈடுபட்டிருப்பதால் திறமையான ஏற்பாடுகள் சாதாரணமாக அமைந்துவிடும். தேர்ந்தெடுக்கப்படும் தலைவர்களும் உபந்யாசகர்களும் சந்தர்ப்பத்துக் கேற்றாற்போல் திறமையான பேச்சாளிகளாக இருப்பார்களாதலால் பெருங்குதூகுல மேற்படுவது சாதாரணமாக இருந்தது. தவிர இவ்வாண்டில் இன்னும் இரண்டு புதிய விஷயங்கள் அதிகப்பட்டன. ஆண்டுவிழாவுக்கு பாஞ்சாலிஅம்மாள் B. A. B. L. தலைமை வகிக்க ஒப்புக் கொண்டிருப்பதும், இதுவரை வெளியில் வராதிருக்கிற சொர்னவல்லி இந்த ஆண்டுவிழாவுக்கு வரப்போவதுந்தான் பெருங் கிளர்ச்சிக்குக் காரணங்களாகும்.

காலைப் பொழுது புலர்ந்தது. மதுரைக்குச் சென்றிருந்த ஸ்பெஷல் காரில் ஆண்டு விழாத் தலைவி பாஞ்சாலி அம்மாளும், உபந்யாசகர்களான மணலித்துறை பூபால பிள்ளை சோணாசலப் புலவர் திருச்சி விசுவநாத பிள்ளை பண்டிதை ரத்னவதி அம்மாள் ஆகிய ஐந்துபேரும் வந்து சேர்ந்தார்கள். அழைப்புப் பத்திரிகை ஏராளமாக அனுப்பப் பட்டிருந்தன காலை 9-30 க்கு ஆண்டு விழா ஆரம்பமாயிற்று. தலைவர்களை மேள தாளத்துடன் பந்தலுக்கு அழைத்து வந்தார்கள். இருக்க இடம் போதவில்லை. பக்கத்திலிருந்த அடைப்பையும் பிரித்து விட்டார்கள். கலெக்டரிடமிருந்து வந்த கடித மொன்றை ஒரு ஆள் மகா கவிப் புலவர் கையிற் கொடுத்தான் வாங்கிப் பார்த்து விட்டு முகத்தைச் சுழித்தார் புலவர். "கட்டாயம் போடவேண்டும் என்று வையாபுரி செட்டியார் சொன்னர்" என்றான் வந்த ஆள். சோமசுந்தரம் கடிதத்தைப் பார்த்தான். "சரி, அவரெங்கே" என்றான்.பழய சாஸ்திரியாரொருவர் வந்து தம்மை யாராவது கும்பிடுவார்களா என்று பார்த்துக் கொண்டே நின்றார். "15 நிமிஷம் பேசலாம்; நேரத்தை வளர்க்கப்படாது; கலெக்டருடைய பெரிய தகப்பனரென்பதற்காகவும் வையாபுரி செட்டியாரின் சிபார்சுக்காகவும் இடந் தருகிறேம். பார்த்துக் கொள்ளுங்கள்; மனஸ்தாபத்துக்கு இடமுண்டாகக் கூடாது" என்று கண்டிப்பாக சோமசுந்தரம் கூறிவிட்டான். தலைவர் முன்னுரை முடிந்து பூபால பிள்ளையின் பிரசங்க மாரி பொழியப் படுகிறது. தமிழிலக்கியக் கடலில் நீந்திய பூபால பிள்ளை பேச்சு ஹாஸ்யச் சுவை ததும்புச் செந்தமிழ்த் தேன் மாரியாக இருந்தது. ஜனங்கள் அதில் ஈடுபட்டு ஊசலாடுகின்றனர். ஒரு காகிதத் துண்டு தலைவர் மேஜைக்கு வந்தது. பூபாலபிள்ளை பிரசங்கத்தை நிறுத்தச் சொல்லுகிறர்களோ என்ற சந்தேகத்தால் "இன்னும் பேசட்டும், தடுக்காதீர்கள்" என்று பலர் கூறினர். தலைவர் எழுந்து 'இது வேறு விஷயம்' என்று கூறியமர்ந்தார். பூபாலபிள்ளை தமக்குக் குறிப்பிட்டிருந்த ஒரு மணி நேரத்திற்கு ஒரு நிமிஷம் முன்பாகவே முடித்துவிட்டு "நீங்கள் ஆசைப்பட்டாலும் ஒழுங்குக்கு நான் கட்டுப்பட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்தார். தலைவர் எழுந்து, "நிகழ்ச்சிக்குறிப்பில்குறிப்பிடப்படாத ஒரு பிரசங்கம் நிகழப்போகிறது. குறிப்பிற்குறையாமல் அதிகரிப்பது நமக்கு லாபமல்லவா? பிரம்ஸ்ரீ பர்வத ராஜ சாஸ்திரியாரவர்கள் "சாஸ்திர சம்பிரதாயம் என்னும் பொருள்பற்றி 20 நிமிஷங்கள் பேசுவார்கள்." என்று கூறி உட்கார்ந்தார். சாஸ்திரியார் தொண்டையைக்கனைத்துக் கொண்டு கடவுள் ஸ்தோத்திரமான ஒரு சமஸ்கிருத சுலோகத்துடன் தமது பிரசங்கத்தை ஆரம்பித்தார்.

"அந்த சர்வேஸ்வரன் சகல ஆன்மகோடிகளையும் ரக்ஷிக்கும் பொருட்டு எடுத்த பூர்ணுவதாரமான கீதோபதேசிக மூர்த்தி என் அப்பன் ரதிகனை நரனுக்கு சாரதியாக எழுந்தருளி திவ்ய காளும்ருதத்தைச் செய்து ரக்ஷித்த அவனுடைய சாக்ஷாத் பாதாரவிந்தங்களை சிரமேல் கொண்டு இந்த உபந்யாசத்தை ஆரோகணிக்கலானேன் இந்த சதஸ்லிலே கூடி இருக்கும் எல்லோரும் வயஸ்ஸிலே கனிஷ்டாளாயிருப்பது மன்னியில் வருணஸ்ரமத்திலும் கீழ்ப்பட்டவாளாக இருப்பதினலே நான் க்ஷமா விண்ணப்பம் செய்யவில்லை. ரிஷிகளாலே வர்ணஸ்ரமங்கள்நிர்தாரணம் செய்யப்பட்டது. வேதங்களிலே உத்கோஷிக்கப்பட்டவர்ணுசிரமங்களகலி புருஷனலே உல்லங்கனம் செய்யப்பட்டு காஷிப் பிரமாணமாக இருக்கிறது. இந்த சதஸ்ஸுக்கு உத்தமப் பிராமணுளாக அக்கிராசனுதிபத்யம் வகிக்க நிச்சயித்திருக்கலாம். பாரம்பர்யமாக ஆச்சார்யாள் காலத்திலிருந்து உபதேசிப்பவாள் பீடத்திலெழுந்தருளியிருக்க, ஆச்ரயிப்போர் பக்தி விநயத்துடன் அமர்ந்து சிரவணம் செய்வார். இவடத்தில் எல்லாம் கலி புருஷன் பிரத்யக்ஷமாக இருக்கிறது...............(போதும்நிறுத்தும் என்று சபையிலிருந்த ஒருவர் சொன்னர்) இப்படியெல்லாம் பேசக் கூடாது. சிரவணஞ் செய்கிறவாள் இஷ்டமிருந்தால் பக்தியுடன் இருக்க வேண்டியது. சமாதானப் படாவிட்டால் எழுந்து போய்விட வேண்டியது...................(யார் போக வேண்டியது. உம்முடைய பேச்சு வேண்டாம். நிறுத்தும் என்றார் மற்றொருவர்) தலைவர் மேசையிலிருந்த மணியை அடித்தார். சாஸ்திரியாருக்குக் கோபம் உதயமாயிற்று. கேட்கிறவாள் எல்லாரும் விட புருஷாள். அவாள் கலகம் செய்யுறாள். அக்கிராசனர் மணியைத் திருகிவிடுகிறார். இருந்தாலும் நான் விஷயத்தைப் பேசுகிறேன். தர்மார்த்த காம மோக்ஷமென்று சதுர்வித புருஷார்த்தங்களிருக்கின்றன. தர்மம் என்பது (தலைவர் குறுக்கிட்டு 'உங்கட்குக் கொடுத்தநேரம் சரியாகி விட்டது' என்றார்) நான் இன்னும் விஷயத்தைமே தொடவில்லை. இந்த மதிப்பில் அவரோகணப் படுத்த ஆச்ரயிப்பது பரமேஸ்வரனுக்காவது சம்மதமாகுமா என்றார் சாஸ்திரியார். கூட்டத்திலிருந்த எல்லோரும் கசகசவென்று பேச ஆரம்பித்து விட்டனர். அங்கிருந்த முத்து நரசிம்மன் எழுந்து "இந்த அசடை ஏன் இங்கே விட்டீர்கள். கூட்டத்தின் உணர்ச்சி தொலைந்துபோய் விட்டது. கையைப்பற்றி இழுத்து வெளியே விடுங்கள்"என்று நெருக்கினன். சாஸ்திரியார் "போதும் போதும் என்னை ஒருவரும் தொட்டுவிடாதீர்கள்" என்று ஒதுங்கிவிட்டார்ந்தார். சோமசுந்தரம் மேடை மீதேறி "அன்பர்களே மன்னிக்க வேண்டும். அமைதியாக இருங்கள். சாஸ்திரியார் பேச்சு மிக விரிவானது நாளைத் தனியாக சாஸ்திரியாரை மட்டும் இருந்து உபந்யாசம் செய்ய ஏற்பாடு செய்வோம் என்று சொன்னர்: சாஸ்திரியாருக்கு பரம சந்தோஷமாயிற்று. பின்னர் குறிப்பிட்டபடி விசுவநாதபிள்ளை பிரசங்கம் நடைபெற்றது. பண்டித ரத்னவதி அம்மாள் பிரசங்கத்தை யெல்லாரும் பாராட்டினர்கள். பெண் சமத்துவத்தைப் பற்றி வெளுத்து வாங்கி விட்டார்கள். ஆண் மக்கள் பெண் மக்களை மிருகத்தைக்காட்டிலும் கீழ்மைப்படுத்தி விட்டு அதன் பயனுக அனுபவிக்கும் கஷ்டங்களை யெடுத்து விளக்கும் போது சபை ததத்தளித்துப் போய் விட்டது. விதவா விவாகம் செய்ய வேண்டியது அவசிய மென்று வற்புறுத்திப் பேசும்போது ஆம் ஆம் வாஸ்தவந்தான் என்று கூட்டத்திலிருந்த அத்தனை பேரும் ஆரவாரஞ் செய்தனர். ருதுவாகு முன் விதவையாக்குவதைப் பற்றிப் பேசும்போது பலரும் உள்ளம் உருகினர்.

தலைவர் முடிவுரைக்குப் பின் மகாகவிப் புலவரால் வந்தனம் கூறப்பட்டது. பெருங் கூட்டங்களின் முடிவில் தங்களை விளம்பரப் படுத்திக்கொள்வதற்காகச் சிலர் சமனில்லாமல் தாமாக ஆஜராகி வாழ்த்துப் பாட்டுப் பாடுவது வழக்கம். யாராவது தடுத்தால் பாட்டை வைத்துக் கொண்டு பல்லைக் காட்டுவார்கள். அப்படியே இங்கும் எருமைக்கிடாப் புலவர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற புலவரொருவர் ஒரு மூலையிலிருந்து எழுந்து மடமடவென்று பின்வரும் பாட்டைப் படித்தார்:—

> பையி லாத ரிக்கும் நல்ல
> பணநி றைந்த வணிகரும்
> மையி லாத வாலி பர்கள்
> வளர்க்கு மிந்த நிலையமும்
> பொய்யி லாத செல்வ ராஜ
> புரமும் வாழ்க வாழ்கவே
> மெய்யி லாத மக்க ளெல்லாம்
> வீழ்ந்து வீழ்ந்து மாய்கவே.

எருமைக் கிடாப்புலவர் என்பதற்குப் புலவர் முதலில் பொருள் கூறினர். தங்கள் குடும்பத்தார் பசுவுக்கு உணவு இட்டு ஆதரிப்பதல்லாமலெருமைக்கு உணவு இட்டு வளர்ப்பதில்லையென்பது ஒரு பொருளாகும். மற்றொன்று எரு-மைக்கு—இடா=குற்றத்துக்கு உரம்போட்டு வளர்க்காதவர் என்பதாகும் என்று விரித்துக் கூறிவிட்டு மேலே பாட்டுக்குப் பொருள் கூற ஆரம்பித்தார். இந்தப்பாட்டினுடைய சொரூபம் முதல் வரியில் தான் குதிக்கிறது. உலகத்திலுள்ள எல்லாப் பணக்காரரும் பணத்தைப் பெட்டியில் வைக்கிறார்கள். நகரத்தார் மட்டும் துணிப்பையில் போட்டுக் கட்டி வைக்கிறார்கள். அதைத்தான் பையில் ஆதரிக்கும் என்று நயமாகச் சொல்லப்பட்டது. விஷப்பை இல்லாத் பசுக்களுக்கு உபயோகப்படும்என்றும்கொள்ளலாம் பணமும்சாதாரணமானதல்ல. நல்லபணம் நிறைந்தஎன்றசொல் பணத்துக்கும் வணிகருக்கும் நடுநாயகமாக விளங்குகிறது நிறைந்தபணம்—நிறைந்த வணிகர் என்று கொள்ள வேண்டும். நிறைந்த

( 14-ம் பக்கம் பார்க்க )

# வீண் பொழுது போக்கு.

(மொழி பெயர்ப்பு.)

மக்களுக்கு "உயர்ச்சி" யேற்படுவது கல்வி, பொருளாதார நிலை, சுற்றுச் சார்புகள் ஆகியவற்றை அடிஸ்தான மாக்கியேயானாலும், அத்தகையவசதிகளொன்றுமில்லாதவர்கள் பலர் இடைவிடா உழைப்பினுல் முன்னேற்ற மடைந்திருக்கிருர்கள். அதற்கான உதாரணங்கள் பலவற்றை உலக சரித்திரத்தில் காணலாம்.

ஒருகால் ஒரு மனிதன், பெஞ்சமின் பிராங்கிலின் என்ற பெரியாருடைய அச்சுச்சாலைக்குப் போனுர். அங்கு பலர் புத்தகங்கள் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அதனைக்கண்டு அம் மனிதன் தானும் ஒரு புத்தகம் வாங்கவெண்ணி புத்தக ஜாபிதாவைப் பன்முறை திருப்பிப் பார்த்துவிட்டு "இந்தப் புத்தகத்தின் விலை என்ன?" வென்ருன்.

வியாபாரி:—ஒரு டாலர்.

அந்த மனிதன்:—ஒரு டாலரா? அதை விடக் குறைச்சலான விலைக்குக்கொடுக்கக் கூடாதா?

வியாபாரி:—அதன் குறிப்பிட்ட விலை ஒரு டாலரே.

அந்த மனிதன் அதற்கிசையாது மீண்டும் பலர் புத்தகம் வாங்குவதைப் பார்த்திருந்து விட்டு "பிராங்க்லின் இங்கே இருக்கிருரா" என்ருர்.

வியாபாரி:—இருக்கிருர். அவர் அச்சுக் கூடத்தில் வேலை செய்து கொண்டிருக்கிருர்.

அம்மனிதன்,—நல்லது, அப்படியானுல் அவரை நான் பார்க்க விரும்புகிறேன்,

உடன் பிராங்க்லின் வந்தார். அம் மனிதன்:—மிஸ்டர் பிராங்க்லின், இந்த புத்தகத்தின் விலை யென்ன?

பிராங்க்லின்:— ஒன்றேகால் டாலர்.

மனிதன்.—ஒன்றே காலா? உங்களுடைய வேலையாள் ஒன்று என்றுதானே கூறினுர்.

பிராங்க்லின்:—நல்லது. நீங்கள் என் வேலைக்குத் தடை செய்யாதிருந்திருந்தால் 1 டாலருக்குத் தந்திருப்பேன். உங்களுக்காக நான் கொஞ்ச நேரத்தைச் செலவாக்கிவிட்டேனல்லவா? அதன் விலையைக் கேட்கின்றேன்.

இம்மொழிகளைக் கேட்டதும் அந்தமனிதன் ஆச்சரிய மெய்தினுன். அப்பால் எப்படியாவது தப்பவேண்டுமென் றெண்ணி, "நல்லது முடிவாக விலையைக் கூறுங்கள்" என்ருன்.

பிராங்கிலின்:—$1\frac{1}{2}$ டாலர்.

மனிதன்:—ஆ! என்ன விலை? ஒன்றே காலிலிருந்து $1\frac{1}{2}$க்குப் போய்விட்டீர்களே.

பிராங்க்லின்:—உங்களோடு பேசிக்கொண்டிருக்க விருக்க வீணுக நேரம் போகின்றதல்லவா? அதன் விலையைக் கேட்கின்றேன். அப்பால் அம்மனிதன் ஒன்றும் பேசாது $1\frac{1}{2}$ டாலருக்கு அதனைவாங்கினுன். இங்ஙனம் நேரத்தை வீணுகச் செலவிடுபவர் பல்லாயிரவர் உண்டு.

பொன்னகைகளை அராவுகையில் விழும் பொடியை மெழுகினுல் சேர்த் தெடுத்துச் சில வருடங்கட்குள் ஏராளமான பணம் சேர்ப்பாருண்டு. அவர்கள் பொற் பொடிகள் சிறிதளவுதானே யிருக்கின்றனவென் றெண்ணுவார்களாயின் கொஞ்சமேனும் பணம் திரட்ட முடியாது. அங்ஙனமே காலமென்னும் பொன்னகையின் ஒரு சிறு பொடியேனும் கிடைக்கப்பெறின் முன்னேற்றம் விழையும் அறிஞர்கள் அதனை வீண் விரயம் செய்ய மாட்டார்கள். அத்தகையோர் ஆச்சர்யமாம் வண்ணம் வெற்றி பெற்ருளிர்வதை, தம் வேலைமுடிந்த பின் கிடைக்கும் ஓய்வு நேரத்தையும், பிரயோசன மற்றவை வணங்கி நிற்பதில் பாழாய் உபயோகிக்கப்படும் பொழுதையும் வீணுய்த் தொலைக்கின்ற ஏமாளிகள் கண்டு வியப்புறுவர்.

உலகில் நல்லிசை நாட்டிப்பேரும் புகழும் பெற்று வாழ்ந்த பெரியார்களின் வாழ்க்கைகளை எடுத்தாராய்ந்து பார்த்தால் அவர்களில் பெரும்பாலோர் பொழுதை வீணுய்ப் போக்காதவர்களே யென்று காணலாம். மேற்சொன்ன பெஞ்சமின் பிராங்க்லின் ஒருகால்,

"நீங்கள் உயிரை நேசிக்கின்றீர்களா? அப்படியானுல் காலத்தை வீண்விரயம் செய்யாதீர்கள். ஏனென்ருல் காலமென்கின்ற உபகரணத்தினுலேயே வாணுளென்னும் கட்டிடம் கட்டப்படுகின்றது" என்ருர். அதேபோன்று கவிஞருலகில் குன்ருவிளக்கா யொளிரும் ஷேக்ஸ்பியர் என்ற மூதறிஞரும்,

"நான் காலத்தை வீண் விரயம் செய்தேன்; இப்போது காலம் என்னை வீண் விரயம் செய்கின்றது" என்று சொல்கின்ருர்.

பிரிட்டிஷ் அரசியல் நிபுணர்களில் தலைசிறந்து நின்றவரும் மிகச் சமீபத்தில் உயிர் நீத்தவரும், பெரிய அனுபவ ஞானியுமாகிய கிளாட்ஸ்டன் என்ற பெரியவர்,

"காலத்தை மிதமாய்ச் செலவிட்டால் எதிர் காலத்தில் அது முதலையும் வட்டியையும் பலப்படப் பெருக்கி நமக்களிக்கும். ஆனுல் அமிதமாகச் செலவிட்டால் வறுமையையும் இன்மையையும் நமக்களித்து விடும்." என்று கூறினுர். இந்த கிளாட்ஸ்டன் நேரத்தை எவ்வளவு பெரிதாக மதித்தார் என்பதற்குப் பல கதைகள் கூறப்படுகின்றன. அவர் மணி பார்ப்பதற்காகத் தம் ஆபீஸ் சுவரிலிருக்கும் கடிகாரத்தை நோக்கினுல் நேரம் பாழாகிவிடுமென் றெண்ணி தம் சட்டையின் கைப்பட்டைப் புத்தான்களுக்குப் பதிலாக (Cuff-Lings) சிறிய வாச்சுகளை அணிந்திருப்பாராம். அப்படி அணிவதனுல்எழுதிக் கொண்டிருக்கும் போதே மிகமிகச் சுருங்கிய நேரத்தில் மணியைப் பார்த்துக்கொள்ளலா மென்பது அவரது துணிபு. இவ்வளவு நுணுக்கமாக நேரத்தை மதித்தோரே உலகில் பெரியவர்களாய்ச் சிறப்புற்றிருந்தார்களெனில் நேரத்தின் விலையைப்பற்றி அதிகமாகக்கூறவும் வேண்டுமோ?

மேரியன் ஹார்லண்டு என்றஆசிரியைத் தன் குழந்தைகள் தூங்கியபின்னரும் வேறு வழிகளிலும் கிடைத்தசொற்ப நேரத்தைக் கொண்டு தான் ஏராளமான நூல்களும் கட்டுரைகளும் யாத்துக் குவித்தனர். இவர் எற்கெனவே ஒருநாளையிலுள்ள 12-மணி நேரத்தில் கூடவும் செய்து முடித்துவிட முடியாத அவ்வளவு வீட்டு வேலைகளும் கிடக்கத் தமக்கு ஒரு அணுவளவு கிடைத்த ஓய்வுநேரத்தை மேற்சொன்னவாறு பிரயோசன கரமாகச் செலவிட்டாரென்ருல் நம் பெண்மக்கள் தலைகுனிந்து வெட்கப்பட வேண்டியவர்களல்லவா?

லாங் பெல்லோ (Long fellow)என்ற ஆங்கிலப்புலவர் காப்சாப்பிடப் போகும் போது கொஞ்சநேரம் காத்திருக்க வேண்டி நேர்ந்தால் அப்போது கிடைக்கும் நேரத்தைக் கொண்டுதான் இன்பெர்னே (Inferno) என்ற நூலை எழுதி வெளியிட்டாராம்.

ஜன்மில்டன் (John Milton) ஆசிரியரும் (Teacher) அரசாங்கக் காரியதரிசியுமாகவிருந்தபோதுதான் பாரடைஸ்லாஸ்டு (Paradise Lost)என்ற சிறந்த பிரபந்தத்தைஇயற்றினுர். மேற்சொன்ன கிளாட்ஸ்டன்தன் ஜேபியில் ஒரு சிறிய கிரந்தத்தை வைத்திருப்பா ரென்றும், ஒரு நிமிடமாவது ஓய்வு கிடைத்தால் அதனை எடுத்துப் படிப்பார் என்றும் சொல்லப்படுகிறது.

மணி, நாள், மாதம், வருடம் என்பவைகளையெல்லாம் துரும்புபோல் மதித்துவாளா பொழுது போக்குபவரே இறுதியில் தங்கள் ஜீவிதத்தில் வெறுப்பும், அருவருப்பும் கொள்கின்றனர். அத்தகையோரே தாங்கள் எதிர் பார்க்கும் காரியம்வெற்றிபெருமல் உழன்று முடிவில், வெற்றி பெறவோரைக்கண்டு பொருமைப்பட்டும் வியந்தும் மனம்வாடுகின்றனர். அத்தகையோரே பலகால் தற்கொலைக்கு மாளாகின்றனர்.

இப்படியிருக்க ஒருசாரார் "பொழுதுபோக்கவழியில்லையே" என்று கவல்கின்றதைக்காண்கின்ருேம். அந்தோ! இம்மக்களை என்னென்பது?

நமதிளைஞர்களில் பல்லோர் பொழுதுபோக்கென்ற முறையில் தினசரி 4-ம் 5-ம் மணிநேரத்தைப் பாழாக்குகின்றனர். இவர்கள் அந்தநேரத்தை ஏதேனும் தொழிலுக்காகச் (Hobby) செலவிட்டால் எவ்வளவு பிரயோசன கரமாயிருக்கும்?

அமெரிக்கா வாசியும் பிரபல கணித சாஸ்திரியுமாகிய ஒருவர் இளமையில் 'செருப்புத்தைப்பவராக விருந்தார். பின் இவர் பற்பல சாஸ்திரங்களில் பிரக்யாதிபெற்ருர். இன்னுர் தினசரி தம் பயிற்சிக்காகச் செலவிட்ட நேரம் 1 மணியாம். இத்தாலிய வாலிபரொருவர் "இங்கு இளைப்பாறுகிறவர்கள் என் வேலைக்கு உதவி செய்க" என்று ஓர் பலகையிலெழுதித் தன் வீட்டின் முற்புறம் தொங்க விட்டிருந்தாராம். இவ்வாறு எழுதியிருந்ததின் நோக்கம் தமக்கு வாய்த்திருக்கும் நேரம் தம் வேலைக்குப் போதியதன்று என்று கண்டு கொண்டதினுலாம்.

எட்மெண்டு ஸ்பென்சர் என்பார் தம் நாட்டு (ஐயர்லாந்து) முக்கிய உத்தியோகஸ்தர் என்ற நிலைமையிலன்று, தமக்குக் கிடைத்த நேரத்தை பிரயோசனகரமாகச் செலவிட்டா ரென்பது பற்றியேயாம் நல்லிசை நிறுவினுர்

சர் ஜான் லப்பாக் என்பவர் வங்கித் தொழிலில் செலவிட்டது போக எஞ்சிய நேரத்தைத்தான தம் கல்வி யறிவிற்காகச் செலவிட்டார்.

பெஞ்சமின் பிராங்க்லின் தம் போஜனம், தூக்கமிவற்றிற்காகச் செலவிட்ட நேரத்தைக்கூட சுருக்கி விட்டாராம். ஒருகால் அவர் தம் தந்தை கடவுளாராதனைக்காக நீண்ட நேரத்தைச் செலவிடுவதைக் கண்டு பொருமல் "தந்தாய்! பல நாட்களுக்குச் சேர்த்து ஒன்ருகத் தொழுகையை நடத்திவிட்டா லென்ன!" என்று கேட்டாராம். அவருடைய முக்கியமான நூற்களெல்லாம் கடல் பிரயாணம் செய்யும் போதுதான் எழுதப்பட்டன என்று சொல்லப்படுகின்றது.

ஸிஸரோ என்ற தத்துவ ஞானி ஒருகால் 'பிறர் வேடிக்கைகட்கும், நாடகம் சினிமா முதலிய கண்காட்சி கட்குமாகச் செலவிடும் நேரத்தை நான்தத்துவ ஞான ஆராய்ச்சிக்காகச் செலவிடுகின்றேன்" என்று குறிப்பிட்டார். பேக்கன் என்ற போசிரியரும் இங்கிலாந்தின் சான்சலர் என்ற முறையிலல்லாமல் நேரத்தைப் பிரயோசனகரமாய் போக்கியதனுலேயே நல்லிசை நாட்ட நேர்ந்தது.

நிகழ்கால மென்னும் உபகரணத்தை எவ்வழியில் நாம் செலவிடுகின்ருேமோ அதற்கேற்றவாறே எதிர்கால வெற்றி அமைந்திருக்கும். எனவே அறிஞர்கள் இறந்தகாலத்தில் நிகழ்ந்தவைகட்காகக் கலங்காது தம் காலத்தைச் செவ்வனே செலவிடுவாராக.

டாக்டர் ஜான்ஸன் என்ற ஆங்கில பாஷா வல்லுநர் தம் தாயின் ஈமச்சடங்குகளை முறையே நடத்துமாறு பணம் சேர்க்கும் பொருட்டு தினசரி மாலை வேளையில் ஓய்வெடுத்துக் கொள்கின்ற நேரத்தை ஒரு வாரம் செலவிட்டு "ராஸலஸ்" என்ற நூலை எழுதிமுடித்தார்.

பொழுதை—ஒருமணிநேரமாயினும்சரி-வீணுகப்போக்குவதனுல் கால நஷ்டத்தைவிட சக்தி நஷ்டமே நம்மை அதிகமாகப் பாதிக்கிறது. சோம்பேறித்தனம் நரம்புகளை அருப்பிடிக்க வைத்து உடல் வலிமையை குன்றச்செய்கின்றது. ஒவ்வொருவரும் தினசரி இரவு தூங்கப்போகும் போது மறுநாள் செய்ய வேண்டியவேலைகட்கு ஓர் அட்டவணை போட்டுக்கொள்வது சாலவும் அவசியமாகும். மீண்டும் மீண்டும் நாம்வற்புறுத்திக் கூறவிரும்புவது "காலம் கருந்தனம்" என்பதே. எவ்வெவர் முன்னேற்றமடையவிரும்புகின்ருர்களோ அவ்வவர்கள், எவ்வழியாலும் தமக்கு வாய்த்த நேரத்தை வீணுகவிரயம் செய்வதில்லை என்று உறுதிசெய்ய வேண்டும். அங்ஙனமாயின் வெற்றியும் இன்பமும் நம்மை நாடிவரும்.





# கடல் வாழும் அற்புதப் பிராயாணிகள்.

(டிட் பிட்ஸ்)

தற்கால விஞ்ஞான அறிவு கடலில் வாழும் பிராணிகளின் ஜீவிதம் தரையில் வசிக்கும் ஜந்துக்களின் ஜீவிதத்தை விட அதிசயமானதும் பலதிறப் பட்டதுமாயிருக்கின்ற தென்ற உண்மையை நன்ருக விளக்கி விட்டது. அன்றி விஞ்ஞானம் நிலத்தில் நிகழ்கின்ற இயற்கை மாறுபாட்டைப் போல பல மடங்கு மாறுபட்ட நிகழ்ச்சிகள் கடலுக்குள் நிகழ்கின்றன வென்பதையும் கண்டு பிடித்து விட்டது— சில மீன்கள் தலை கீழாக இயங்குகின்றன. சில மீன்கள் வயிற்றை மேலே காட்டி இயங்குகின்றன. சில மீன்கள் காலால் நடக்கின்றன. சில மீன்களுக்கு சர்ப்பத்தைப் போல விஷப் பற்களிருக்கின்றன, சிலமீன்கள் ஒரு குதிரையைக் கூடவும் நிலத்தில் வீழ்த்திவிடத் தகுந்த அளவு பெரிய மின்சார சக்தியை ஏந்திச் செல்கின்றன. இன்னும் சில எதிர் பாராத விசேஷ அமைப்புகளுடைத்து மிருக்கின்றன.

## போர் புரிபவை

கடலில் வாழ்பவைகளெல்லாம் மீனன்று. பலர் திமிங்கிலத்தை மீனென்று நினைக்கிருர்கள். ஆனுல் திமிங்கலம் பால் குடித்து வளருவதும் (Mammal) சூடான இரத்த முடையதும் (Warm blooded) காற்றை சுவாசிப்பதும் (Air-breather) ஆகும். நாயை மீன் என்று அழைப்பதில் எவ்வளவு பொருளுண்டோ அவ்வளவு திமிங்கிலத்தை மீன் என்பதிலும் பொருளுண்டு. அது கடலில் வாழ்கின்றதென்ற ஏக காரணத்துக்காக மீன் என்று கூறிவிட்டால் இறக்கையுள்ள எலியையும் (வெளவால் Bat) பட்சியென்று சொல்லியேயாக வேண்டும்.

நாம் நதிகள், ஏரிகள், குட்டைகள், மகா சமுத்திரங்களாகிய வைகளில் குளிர்மிக்க, வழு வழுப்பான மீன்களைப் பார்த்தால் அவை ஒரு வகையான மந்த ஜீவிதத்தை நடாத்துகின்றன வென்று நினைக்கின்ருேம். ஒருவராவது அவற்றிற்கும் சமுதாய வாழ்க்கையும் நிலம் வாழ் ஜந்துக்கள் அனுபவிக்கின்றது போன்ற இன்ப துன்பங்களு முண்டு என்றெண்ணுவதில்லை. ஆனுல் இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சி நாம் நினைப்பது போல அவை வாழவில்லை யென்பதை நிரூபிக்கின்றது.

மீனுலகிலும் பல குண்டோதரர்களும் (Gluttons) போர்வீரர்களும்ஒட்டக்காரர்களுமிருக்கின்ருர்கள். சுருவென்றமீனின் வயிற்றில் மூத்துச்சிப்பிகள். கடலாமை எலும்புத்துண்டுகள், கோழி இறகுகள், கோதுமை, இதர தானியங்கள், காபித்துள், அவரை விதைகள். உமி, ஆட்டின் கொம்புகள், பசுவின் எலும்புகள், மரத்தொட்டிகளும், தகர "கான"களும் கூட கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. சுரு ஒரு குண்டோதரனுகும். அதற்கு ஒருபோதும அஜீரண மேற்படுவதில்லை. ஏனெனில் அதன்வயிற்றில் ஏதேனும் வேதனைகண்டால், குடலை வாய்வழியாக வெளியே கொண்டுவந்து அதிலிருக்கும் பொருளை வெளியேகொட்டிவிடும் சக்தி அதற்குண்டு.

## நாட்டுப்புற வாழ்கை.

நிலத்தில் பல புல்லுருவிகள் (Parasites) காணப்படுவது போல கடலிலும் பல காணப்படுகின்றன. அவை சோம்பேறித்தனமாக ஜீவிதத்தைக் கழிப்பதைக் காணலாம். பாறைகளின் மேற்புறத்தில் நூற்றுக் கணக்கான (Polyps) தொக்கி யொட்டிக் கொண்டிருப்பதை பலரும் கண்டிருப்பார்கள். (போலிப் என்பது குழாய் வடிவத்திலும் ஒரு நுனியில் பல நுண்ணிய நூல் போன்ற தசைகளையுடையதாகவுமிருக்கின்ற ஒருவித ஜந்து) இந்த போலிப்ஸுகளை மீனகள் பிடித்துச் சாப்பிட எவ்வளவோ முயல்வதுண்டு. ஆனுல் கூடுவதில்லை. ஹெர்மிட் கிராப் என்ற நண்டு தீண்டும் விஷஉறுப்புகளுள்ள ஆனிமோன்ஸ் என்ற ஜந்துக்களினிடையில் சென்று வீழ்ந்துவிடுகின்றது. அவ்வாறு விழும் நண்டுகள் பசியுள்ள மீன்களுக்கு இரையாவதில் எட்டுணையும் சந்தேகமில்லை. ஆனுல் சாதாரண நண்டுகட்குக் கெட்டியான தோலிருப்பதால் ஆனிமோன்ஸின் விஷவுறுப்புகள் அவற்றிற்கு ஊறு செய்வதில்லை. எனவே நண்டுகள் மீன்களுக்குப் பயப்படாது வாழ்கின்றன. ஆனுல் ஆனிமோன்கள் அவற்றை எவ்வாறு ஏற்றுக் கொள்ளுமென்பது புலப்படவில்லை.

நிலத்தில் வாழும் ஜந்துக்களில் விரூபமான முகமுடையவைகளும், காரணம் சொல்ல முடியாதபடி மாறுபட்ட அங்கமுடையவைகளும், அழகிய நிறங்களுடையவைகளு மிருக்கின்றன வென்ருல் நீர் வாழ் பிராணிகளிலும் அத்தகைய ஜந்துக்கள் ஏராளமுண்டு.

எகிப்தில்ஒருவித நடக்கும் மீனிருக்கின்றது. அதனை தண்ணீருக்கு வெளியே எடுத்து விட்டால் மற்ற மீன்களைப் போல சிறகையடிப்பதில்லை. அதற்குப் பதிலாக முன் சிறகுகளினுதவியால் எழுந்து நிற்கின்றது. இந்த மீனினுல் காற்றை சுவாசிக்க முடியும். எப்பொழுதாவது அவை வாழும் நீர்ப்பரப்பு வற்றிப் போய் விட்டதானுல் இன்னொரு நீர் நிலையை நாடிப் பூமி வழியாகப் பல மைல்கள் நடந்து செல்லும். அவைகள் சஞ்சாரம் செய்வது பனி பெய்கின்ற இராக் காலங்களிலே தான். மெக்ஸிக்கோக் குடாக்கடலில் ஒரு வகையான மீன் (Batfish) இருக்கின்றது. அதுவும் காலால் நடந்து செல்வதே. இந்த மீனினுல் நன்ருக நீந்திச் செல்ல முடியும். என்ருலும் வேடிக்கையான அதனின் பாதங்களாலும், சக்தி வாய்ந்த கால்களாலும் நடக்கவும் குதித்துப் போகவும் விரும்புகின்றது. அதனை மேலே இருந்து பார்த்தால் வால் முளைத்த தேரை யென்றே கூறவேண்டும்.

ஊசிமீன் (Needle-Fish) அதனுடைய விசேஷ மாதிரியான சிறகுகளின் இயற்கையினுல் தலை கீழாக நீந்திச் செல்கின்றது. வட்டமீன் (Globe Fish) என்பது சாதாரணமாய் நீந்துவதாகும். அதன் உடம்பின சிறு சிறு ஊசிபோன்ற அமைப்புகள் மூடியிருக்கின்றன. பய மேற்படவோ பகைவரால் தாக்கப்படவோ செய்யப்பட்டால் காற்றை ஒரே இழுப்பாக உள்ளே இழுத்து அதன் உடம்பிலுள்ள முட்களை யெல்லாம் சிலிர்க்கச் செய்கின்றது. அதோடு அதன் உடம்பையும் காற்றினுல் பெருக்கிக்கொள்கின்றது. ஆதலால் அதன் நிலைகுலைந்துதலை கிழாய் மாறிப்போகின்றது. (அதாவது வயிறுமேலும முதுகு கீழுமாக மிதக்கின்றது)

## கடலுக்குள் குரலோசை.

ஏதோகாரணங்களால் அப்ரிக்கன் நைல் நதியிலுள்ள Cat Fish என்பவை பெரிய மாற்றமடைந்து முதுகினுல் இயங்குகின்றன. இவ்வாறு வயிறுமேல் நோக்கியிருக்க நீந்துவதால் வயிறு கருப்புநிறமாகவும் முதுகு வெண்மை நிறமாகவு மிருக்கின்றது. இதன் இருபக்கங்களும் வெள்ளி போல் மின்னுகின்றன.

மீன் ஊமை ஜந்துவன்று. அவைகட்குப் பலவித சத்தமிருகின்றன. சில கனைக்கின்றன; சில பீரங்கி யோசைபோல் முழங்குகின்றன. பிளன்னி (Blenny) என்றமீன் மிருகங்களைப்போல் கத்துகின்றது.

தென்னுபிரிக்காவில் ஜிம்னோட்டஸ் எலக்ட்ரிக்கஸ் என்ற ஒருவகையான மீனிருக்கின்றது. அதன் நீளம் 4 அடி. அதன் தலை காட்மீனைப் போன்றிருக்கின்றது; உடம்பு ஈல் என்னும் மீனைப்போன்றிருக்கின்றது. அது ஒருசக்திவாய்ந்த மின்சார பாட்டரியை ஏந்தியிருக்கின்றது. லண்டன் சர்வகலாசாலை நிபுணர் ஒருவர் இம்மீனைப்பற்றிக் கூறுவதாவது:-

இம் மீனினுல் ஒரு குதிரையைக் கூடவும் வீழ்த்திவிட முடியும். ஒருசிறந்த மீனை பரிசோதனை செய்து பார்த்த போது உடம்புக்குள் 4 பாட்டரிகளிருக்கக் கண்டோம்.

## போஜன வேளை மணியைக் கேட்கின்றன.

இலங்கையிலுள்ள வானுலகமீன் (Paradise-fish) அதிசயகாமான குடும்பவாழ்க்கையை நடத்துகின்றது. இவ்வினத்தில் தந்தை மீனே பெரும்பான்மையாக எல்லா வேலைகளையும் செய்வது வழக்கம். அது ஒருவகையான கூண்டுபோன்ற கூட்டைக் கட்டுகின்றது. இந்தக் கூட்டை அமைக்கக் கருவிகளா யிருப்பவை செடிகளோ, குச்சுகளோ அன்று. அதன் வாயிலிருந்து ஊறிவருகின்ற ஒருவித பசை நீரால் கூட்டை அமைக்கின்றது. கூடமைந்ததும் தாய் மீன் கூட்டின் அடியில் ஆறு அல்லது எட்டு முட்டைகளை இடுகின்றது. அவற்றைத் தந்தை மீன்வாயினுல் கௌவி மேற்படிக் கூட்டுக்குள் போட்டு விடுகின்றது. இந்தவேலை எல்லா முட்டைகளும் போட்டுத் தீருவது வரையிலும் நடைபெறுகின்றது. அப்பால் தந்தை தன் மனைவியைத் துரத்திவிட்டு முட்டைக்குக் காவலாளி யாகின்றது. ஒருகால் பெண்மீன் உபேக்ஷயாக வேனும் கூட்டினருகில் வந்துவிட்டால் ஆண்மீன் கொன்று விடும். ஏனென்ருல் அத் தந்தைக்குத் தன் மனைவியின் கையில் முட்டைகளோ குஞ்சுகளோ கிடைத்தால் அத்தனையும் விழுங்கப்பட்டு விடுமென்பது தெரியும்.

குஞ்சுகள் எல்லாம் பொரிக்கப்பட்டு வெளிவந்ததும் அவைகள் எல்லாம் சேர்ந்து கூட்டமாக சஞ்சரிக்கின்றன. தந்தை மீன் எப்போதும் பக்கத்திலேயே இருக்கும். தனக்கு உணவுகிடைத்த போதெல்லாம் அது அதனை நன்ருகச் சுவைத்துத் தம் குழந்தைகளின் முன்னுல் உமிழும். அதனைக் குஞ்சுகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்று பழகும். தந்தை தன் குடும்பப் பொறுப்பு முழுதும் தன தலையில் குவிந்து கிடப்பதாக நினைக்கின்றது. இந்த எண்ணம் குஞ்சு மீன்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளும் நிலைமையை யடைவதுவரையிலும் தந்தைமனதில் குடிகொண்டிருக்கின்றது. குஞ்சுகள் முதிர்ச்சியடைந்துவிட்டால் உடன் ஓடிப்போய்விட வேண்டும்; இன்றேல் எத்தனையோ நாட்களாக அன்போடு வளர்த்த தந்தை எல்லா புதல்வர்களையும் தம் வயிற்றுக்குள் செலுத்திவிடுவார்.

ஈண்டு மௌத்பிரீடர் (mouth—breeder) என்ற மீனைப்பற்றிக் குறிப்பிடவேண்டும். இவ்வினத்திலுள்ள பெண் மீன்கள் மணலில் முட்டையிடுகின்றன. முட்டைகளெல்லாம் கொஞ்சம் பக்குவமடைந்ததும் தாய்மீன் அவற்றை வாயில் எடுத்துவைத்துக்கொள்கின்றது. இங்ஙனம் 14நாட்கள் எல்லாமுட்டைகளும வாயிலேயே இருந்தபின்னர் அங்கிருந்தே பொரிக்கின்றன. இந்தப் பதினான்கு நாளும் தாய் மீனுக்கு உப வாச நாட்களேயாகும்.

மியூனிச் சர்வ கலாசாலை புரொபசர் காரல் வான் பிரிஷ் என்பவர் ஒரு டாங்கிலுள்ள மீன்களுக்கு போஜன வேளையிலடிக்கும் மணிக்குத்தகுந்தபடி நடக்குமாறு கற்பித்திருக்கிருர். சாதாரணமாக நாய்களும் பூனைகளும் மணியோசையைக்கேட்டு உணவுக்காக ஓடி வருவதைக் கேட்டிருக்கிருேம். ஆனுல் மீன்களும் அவ்வாறு நடந்து கொள்ளுவது வியப்பல்லவா?

வான் பிரிஷ் மணியோசையைக் கேட்க மட்டிலும் கற்பித்தது விசேஷமன்று; ஆனுல் பற்பல விதமான ஓசைகளின் வித்தியாசத்தை அறிந்துகொள்ளுமாற்றலையும் கற்பித்திருக்கிருர்; அதுவே விசேஷம். அவர் சோதனை காட்டுவதற்காக ஒரு வித மணியை யடித்துவிட்டு கோபிலென் சேர்ந்த உணவை டாங்கில் எறிந்தார். ஒரு மீனுவது வந்து சாப்பிடவில்லை. ஆனுல் எப்போதும் அடிக்கும் உண்மையான மணியை யடித்தபோது ஒரு மீனுவது தவருது மேலே மிதந்துவந்தன.

மிஸ் கெர்ட்ரூட் வொயிட் என்பவர் மீன்களுக்கு நிறங்களை—அதாவது சிவப்பு, நீலம், மஞ்சள்—ஆகியவற்றை பகுத்தறிய முடியுமென்பதை நிரூபித்துக் காட்டினுர். அவர் நல்ல உருசியுள்ள உணவை சிகப்புக் காகிதத்திலும், கசப்பான சில பொருட்களை நீலக்காகிதத்திலும், காலியான சில பச்சைக் காகிதங்களையும் மீன்களுக்குப் போட்டு நாளடைவில் சிகப்பை அவைகள் தேடிப்பிடிக்கவும் நீலத்தைத் தள்ளிவிடவும், பச்சையை நெருங்காமலே இருந்து விடவும் செய்யுமாறு கற்பித்து அவற்றிற்கு நிற வித்தியாசத்தைப் போதித்திருக்கிருர்.

## இருபதாயிரம் வகைகள்.

ஒரு மீன் நேராக நீந்துவதுபற்றியோ முதுகின்மேல் நீந்திச் செல்லுவதுபற்றியோ தலைகீழாகப் போவதுபற்றியோ கவலையில்லை. ஆனுல் ஒரு விமானி மேகக்கட்கிடையில் செல்லும்போது தான் நேராகவே செல்கின்ருனு அன்றி தரையை நோக்கிச் செல்கின்ருனுவென்று உணர்ந்து கொள்ளச் சில கருவிகள் உதவுவதுபோல மீனும் தன் செல்லை அறிந்துகொள்ளுமாறு சில தனி உறுப்புகளைப் பெற்றிருக்கின்றது. மீனுக்கு அதன் otoliths ஏ விமானியிடமுள்ள altimeter உம் bank-Indicator உம் ஆகும். ஓட்டோலித்ஸ் என்பது மீனின் செவிக்கு சமீபத்திலிருக்கின்றது. அதனை சிலகால் Ear-stonsஎன்றும்சொல்வதுண்டு. இந்த அமைப்புகள் பூமியின் கவர்ச்சிவலிக்குத் தகுந்தவாறு முன்னுடியோ பின்னுடியோ சிறிது நகர்ந்தால் உடன்அச்செய்தி மூளையை அடைகின்றது.

இதுவரையிலும் 20 ஆயிரம் மீன் இனங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளே முதுகெலும்புள்ள ஜந்துகளில் தொகையில் முன்னிற்பவை.

# இரண்டாவது செட்டிநாட்டு ஸ்பெஷல்.

(நமது நிருபர்)

காரைக்குடி, ஆவணி 15

வால்டயரிலிருந்து ராத்திரி 10-30 மணிக்கு வண்டி புறப்பட்டு 3 மணிக்கு ராஜமகேந்திரம் வந்து சேர்ந்தது. கோதாவரி ரயில்வே ஸ்டேஷனில் வண்டியை நிறுத்த இடமில்லாததினால்இங்கு வந்துவண்டியை நிறுத்தினார்கள்.

## 6-உ ராஜமகேந்திரம்.

இங்கிருந்து காலையில் கோதாவரி நதிக்குப் போய் ஸ்நானம் செய்து கோடிலிங்கத்தைத் தெரிசித்தும் நகர மண்டபம் வந்து மேற்படி பட்டத்திலுள்ள விக்னேஸ்வரரை தெரிசித்துக் கொண்டும் ரயில்வே ஸ்டேஷன் வந்து சேர்ந்தார்கள். இங்குள்ள நகரச் சத்திரத்தில் ஒன்றும் அரையும் மகமை வாங்கப்பட்டன. மிக சிலர் மகமை தர முடியாதென்று சொல்லிவிட்டார்கள்.

இங்கிருந்து சாயந்திரம் 3-45 மணிக்கு வண்டி புறப்பட்டது.

## 7-உ சென்னை.

7உ காலை 7-30 மணிக்கு ராயபுரம் ரயில்வேஸ்டேஷன் வந்து சேர்ந்தது.

இங்கு சிலர் ரயிலிலும் பலர் பவளக்காரதெருவிலும் சிலர் பங்களாக்களிலும் தங்கி இருந்தார்கள். இதற்கு முன் மதராஸ் வாராதவர்கள் சிலர் மட்டும்திருவெற்றியூர், மைலாப்பூர், திருவல்லிக்கேணி கோவில்களுக்குப் போய் தெரிசித்து வந்தார்கள். பட்டணங்களையும் சுற்றிப் பார்த்தார்கள். இங்கு ஏராளமாகக் கண்டாங்கி, பட்டுகள் கச்சை வகையறுக்கள் வாங்கப்பட்டன.

8-உ ராத்திரி எல்லோரும் ராயபுரம் ரயில்வேஸ்டேஷன் வந்து சேர்ந்தார்கள். இங்கிருந்துவண்டி12-மணிக்குப் புறப்பட்டு ஆர்க்கோணம் 2 மணிக்கு வந்து சேர்ந்தது. 3-மணிக்குப் பெரிய வண்டியிலிருந்து சின்ன வண்டிக்கு மாறினார்கள். சின்ன வண்டிக்குப் பெரிய வண்டி சௌகரியமாக இவ்விடத்தில்தான் தெரிந்தது. பெரிய வண்டியிலிருந்த சாமான்களை சின்ன வண்டியில் மாற்றியவுடன் சாமான் வைப்பதற்கு வண்டியில் இடமிருந்ததே ஒழிய "புழங்கு"வதற்கு இடமில்லை. சாமான்கள் இறக்கும்வரை இவ்வித கஷ்டம் இருக்கக் கூடுமென்று நினைத்தார்கள். புறப்படுகிற போது வண்டி மாத்திய சமயத்தில் சிலருக்கு இடமில்லாமல் போனமாதிரி இப்பவும் இடமில்லாமல் போய்விட்டது. இடமில்லாதவர்களுடைய சாமான்களை காலியாக விருந்த இரண்டாவது வகுப்பு ரூம்களில் போடச் சொல்லி ஏற்றிக்கொண்டார்கள்,

புறப்படும் போதுதான் தென் இந்திய ரயில்வே கம்பெனியாருடன் மகாலிங்கம் கம்பெனியார் வண்டிகளுக்கு ஏற்பாடு செய்ததில் தாமதம் ஏற்பட்டதாக எழுதினோம். இப்போது தாமப்பட காரணம் இல்லை. எத்தனைபேர் வண்டியில் வருகிறார்களோ அவர்களுக்கு உள்ள வண்டி கொடுக்க வேண்டியதுதான். கொடுக்காததற்கு ரயில்வே கம்பெனியாருக்கும் மகாலிங்கம் கம்பெனியாருக்கும் கடந்த சடிதப் போக்குவரத்தைப் பார்த்தால்தான் தெரியும்.

## 7உ ஆர்க்கோணம்.

இங்கிருந்து வண்டி 7-மணிக்குப் புறப்பட்டு 8.15-மணிக்குக் காஞ்சீவரம் வந்து சேர்ந்தது.

## காஞ்சீவரம்.

இந்த காஞ்சீவரத்தில் 1008 சிவாலயங்களும் 108 திருப்பதிகளும் இருப்பதாக ப்புராணங்களில் எழுதப்பட்டிருக்கிறது.

இந்தக் காஞ்சீவரமானது தற்காலம்சின்ன காஞ்சீவரமென்றும் பெரிய காஞ்சீவரமென்றும் பிரிக்கப்பட்டிருக்கிறது.

எல்லோரும் வண்டிகள் வைத்துக் கொண்டு பெரியகாஞ்சீபோய் புஷ்கரணியில் ஸ்நானம் செய்து ஏகாம்பர நாதரையும் காமாக்ஷியையும் சுப்பிரமணியர் உலகளந்த பெருமாளையும் தெரிசித்து வந்தார்கள். சின்ன காஞ்சிக்குச் சிலர் காலையிலும் சிலர் மாலையிலும் வரதராஜ சுவாமி கோவில் போய் தெரிசித்து வந்தார்கள். ஏகாம்பரநாதர் கோவிலில் ரூபாய் 25க்கு அபிஷேகம் செய்யப்பட்டது.

இங்கிருந்து வண்டி ராத்திரி 9 மணிக்குப்புறப்பட்டது. செங்கல்பட்டில்சமயல்வண்டிக்குப்பதிலாக ஒரு பிரயாணிகள் வண்டி மாற்றி அதில் இடமில்லாத பிரயாணிகளுக்கு இடம் கொடுக்கப்பட்டது. விருத்தாசலம் 9மணிக்கு வந்துசேர்ந்தது.

## 10உ விருத்தாசலம்.

எல்லாரும் நதிக்குப்போய் ஸ்நானம் செய்து சிவன்கோவிலில் போய் பழம் பெருநாதரைத் தெரிசித்து வந்தார்கள்.

இங்கிருந்து வண்டி ஒருமணிக்குப் புறப்பட்டு சாயங்காலம் 6மணிமுதல் புதுக்கோட்டை, திருமயம், செட்டிநாடு, கோட்டையூர் காரைக்குடி, கல்லல் ஸ்டேஷன்களில் கொண்டுவந்த சாமான்கள் இறக்குவதற்கு நின்றது. அவர் அவர்களுக்கு சௌரியமுள்ள ஊர்களில் சாமான்களை இறக்கி கொடுத்தவுடன் வந்திருந்த சொந்தக்காரர்களைக்கண்டு க்ஷேமலாபம் விசாரித்துக் கொண்டார்கள்.

தனுஷ்கோடிக்கும் விடிய 4 மணிக்கு வந்துசேர்ந்தது.

## 11உ தனுஷ்கோடி.

காலையில் எல்லோரும் சேது ஸ்நான கட்டத்துக்குப் போய் ஸ்நானம் செய்து வந்தார்கள். பலர் நகர சத்திரத்திலும் சிலர் ரயிலிலும் தங்கி இருந்தார்கள், நகர சத்திரத்திலுள்ள சிவலிங்கத்துக்குத் தேங்காய் பழம் வாங்கி போய் அர்ச்சனை செய்தார்கள்.

இங்கு ஒரு வண்டி சரியில்லாததினால் அதற்குப் பதில் வண்டி மாற்றினார்கள்.

இங்கிருந்துவண்டி 4-30 மணிக்குப்புறப்பட்டு ராமேஸ்வரம் 5-30 மணிக்கு வந்து சேர்ந்தது.

எல்லாரும் நகரச் சத்திரம் போய்ச் சேர்ந்தார்கள். சிலர் தனியே வீடு பிடித்துக்கொண்டு இருந்தார்கள்.

## 12, 13உ ராமேஸ்வரம்.

இங்கு அநேக தீர்த்தங்கள் இருக்கின்றன. (பெயர் எழுத இடம் போதாது.) எல்லா தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து சேதுமாதவர் இராமலிங்கம் அம்பாள் வகையறுக்களை தெரிசித்து வந்தார்கள். இங்கு ரூ. 125-ல் அபிஷேகம் எல்லா சுவாமிகளுக்கும் நடந்தது. 13உ ராத்திரி எல்லோரும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்கள். இங்கிருந்து வண்டி ராத்திரி 11 மணிக்கு புறப்பட்டு 3-30 மணிக்கு மதுரை வந்து சேர்ந்தது.

## 14உ மதுரை.

காலையில் பொற்றாமரையில் ஸ்நானம் செய்து மீனாட்சி அம்பாளை தெரிசித்து வந்தார்கள். இங்கு நூற்றிச் சொச்ச ரூபாயில் அபிஷேகம் நடந்தது.

ராத்திரி எல்லாரும் வண்டிக்கு வந்து சேர்ந்தார்கள். 2 மணிக்கு வண்டி புறப்பட்டு விடிய 5 மணிக்குக்காரைக்குடி வந்து சேர்ந்தது.

## 15உ காரைக்குடி.

இங்கிருந்து எல்லோரும் அவரவர்கள் ஊருக்கு எப்போதும் வண்டியை விட்டு புறப்பட்டுப் போனார்கள்.

இதனடியில் இந்த ஸ்பெஷலில் வந்தவர்களுடைய நகரப் பிரயாணிகள் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது:—

### தேவகோட்டை.

ஜமீந்தார் அள அரு அருணாசல சுவாமிகள், டிெயார்கள் மகன் அழகப்ப செட்டியார், தி ராம சு குட்டயன் செட்டியார்.

### ஆ. முத்துப்பட்டணம்.

சி நா சி ராம நாச்சியப்ப செட்டியார், கதி ராம சோமசுந்தரஞ் செட்டியார்.

### சிறுகூடல்பட்டி.

வயி சு நா சொ சொக்கலிங்கஞ் செட்டியார்.

### நாச்சியார்புரம்.

சுப ராம ராம ராமசாமி செட்டியார், ஆவி சண்முகம் செட்டியார், நா மெ பள ராமசாமி செட்டியார்.

### கோத்தமங்கலம்.

அரு வெ ராம லெ லெட்சுமணஞ் செட்டியார்.

### கானாடுகாத்தான்.

கா அ சு சொ சொக்கலிங்கஞ் செட்டியார், டிெயார் மகன் சுப்பிரமணியன்.

### கண்டனூர்.

தெ வீர தெ தேனப்ப செட்டியார், வயி ராம நா ராமசாமி செட்டியார்.

### நேமத்தான்பட்டி.

ப செ பழ குமரப்ப செட்டியார்.

### கல்லுப்பட்டி.

பள சு அரு அருணாசலஞ் செட்டியார் டிெயார் மகன் பழநியப்ப செட்டியார்.

### கா. முத்துப்பட்டணம்.

வ ராம ராமசாமி செட்டியார், அரு நா நாச்சியப்ப செட்டியார்.

### காரைக்குடி.

தொ மெ ராம வெ வெங்கடாசலஞ் செட்டியார், வயி சு ராம லெட்சுமணஞ் செட்டியார், ப ராம பள ப பழநியப்ப செட்டியார், சு பள சுப்பய்யாசெட்டியார், ராம நாக நாகப்ப செட்டியார், ஆவி பள ப அண்ணாமலை செட்டியார், அ நா நா க நாகப்பசெட்டியார், ஆரு பள சி பள முத்தய்யா செட்டியார், பழ மெ சு லெ மெய்யப்ப செட்டியார், பள மெ ஆவி பழனியப்ப செட்டியார், அ சித சு மு முத்துக்கருப்பன் செட்டியார், நா. புதூர் அ லெ சொக்கலிங்கஞ் செட்டியார்.

### கோட்டையூர்.

அ க ராம மெ நா மெய்யப்ப செட்டியார், கு ப சு அரு அலணாசலம் செட்டியார், லெ பெ லெ லெட்சுமணஞ் செட்டியார், டிெயார் மகன் ராமசாமி செட்டியார், மு பெ மு ராம வள்ளியப்ப செட்டியார்,

### கருங்குளம்.

சி கரு கருப்பஞ் செட்டியார்.

### அ. சிறுவயல்.

ந ரு சுப சுப்பிரமணியஞ் செட்டியார்,

### கல்லல்.

நா மு மீசாம சோமசுந்தரஞ் செட்டியார்,

### வலையபட்டி.

பள பெ சுப்பிரமணியஞ் செட்டியார்,

### நெய்குப்பை.

முத்து கு மு சுப்பிரமணியன் செட்டியார், சா பள சு ராம சுப்பிரமணியஞ் செட்டியார்,

### அரிமளம்.

ச ராம அ ராம ராமசாமி செட்டியார்,

### (கா. செ.) ஜெயங்கொண்டபுரம்.

தெ கா ராம மெ மெய்யப்ப செட்டியார்,

### பள்ளத்தூர்.

அ மு ராம முருகப்ப செட்டியார், அள அ லெ சோலையப்ப செட்டியார், சொ வி சொ சொக்கலிங்கஞ் செட்டியார்,

### கண்டரமாணிக்கம்.

வி சா காசி செட்டியார், ஆவி மு ராம ராமசாமி செட்டியார்,

### கீழசிவல்பட்டி.

நா கி சி நா வெள்ளையன் செட்டியார், நா அ தெ வள்ளியப்ப செட்டியார், வெ அள திருப்பதி செட்டியார்.

### செம்பனூர்.

கும நா சுப நாச்சியப்ப செட்டியார், கும நா ராம ராமசாமி செட்டியார், டிெயார் மகன் நாச்சியப்பன்.

### கடியாபட்டி.

மு அள மு சொக்கலிங்கஞ்செட்டியார்

### ஒ. சிறுவயல்.

ப ராம அள சோலைமலை செட்டியார், சிவ ராமய்யர்.

### பெரிஞ்சூர்.

வெ ராம வெ குப்பமுத்து அம்பலம்.

### இலுப்பக்குடி.

ந சு சோமசுந்தரம் பிள்ளை.

---





# 'யுத்தம் ஒழிவதே எங்கள் கக்ஷி'

## ஸ்ரீ பட்டேல் கருத்து.

யுத்தத்தை யொழிக்கவேண்டுமெனத் தயாரிக்கப்பட்டிருக்கு மறிக்கை ஆகஸ்டு 29ந் தேதி ஆம்ஸ்டர்டாமில் நடைபெற்ற யுத்த எதிர்ப்புக் காங்கிரசில் நிறைவேறியது. திரு. டிராட்ஸ்கியை ஆதரிப்பவர்களான 5 பிரஞ்சுக்காரர்களும் ஸ்ரீ வி. ஜே. படேலும் ஓட்டுக்கொடுக்கையில் திரு. பட்டேல் பேசியதாவது:—பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலிருந்து இந்தியா விடுதலை பெறவேண்டு மென்பதே நான் இங்கு வந்ததின் முக்கிய நோக்கமாகும். யுத்த எதிர்ப்புக் காங்கிரசின் கொள்கைகளும், இந்திய ஜனங்களின் கொள்கைகளும் அநேகமாக ஒன்றேயாம். மேற்படி அறிக்கையிலுள்ள சில அம்சங்கள் நீக்கலாக நான் அதனை ஆதரிக்கிறேன்.

---

## 3 கோடிப் பொன்னுக்கு ரேடியோ கருவிகள்.

பிரிட்டனில் ரேடியோ கருவிகள் உற்பத்தி செய்யும் சங்கத்தினர் வெளியிட்ட அறிக்கையிலிருந்து சென்ற சனிக்கிழமை முடிவடைந்த ஒலிம்பியா காட்சிக்கு 1 லட்சத்து 20 ஆயிரம் ஜனங்கள் விஜயம் செய்திருந்தார்களென்றும் 3 கோடிப் பொன் பெறுமானமுள்ள ரேடியோ கருவிகள் விற்பனையாயின வென்றும் தெரிகிறது. சென்ற வருஷம் நடந்த காட்சியில் 2 கோடிப் பொன் பெறுமான சாமான்கள் விற்பனையாயின.

---

## பிரத்யேத் குமாருக்குத் தூக்கு.

டக்ளஸை கொலைசெய்த பிரத்யேத் குமாருக்கு விதிக்கப்பட்ட தூக்குத் தண்டனையை கல்கத்தா ஹைகோர்ட்டார் ஊர்ஜிதம் செய்ததை மறுத்து பிரிவி கவுன்சிலில் அப்பீல் செய்து கொள்ளப் போவதாக தண்டனையடைந்தவரின் வக்கீல் ஒரு மனு போட்டதின் பேரில் வங்காள சர்க்கார் நீதிஸ்தல இலாகா காரியதரிசி பின்வருமாறு பதில் கூறியிருக்கிறார்:—பிரிவிக் கவுன்சிலில் அப்பீல் செய்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டதற்கான லட்சியங்களை செப்டம்பர் 16-ந் தேதிக்கு முன் காட்டவேண்டும். அதன் பேரில் குற்றவாளியை தூக்லிடுவதை 16-ந் தேதிவரையிலும் ஒத்திவைக்கிறோம்.

---

## மழைகாலத்தில் கடும் வெயில்

சென்ற பத்து தினங்களாக ரங்கூனில் மழை பெய்யவில்லை. நாட்டுப் புறங்களிலும் இக்கதியே ஏற்பட்டிருக்கிறது. ஆகஸ்டு மாதம் மழைக்குப் பெயர் போனது. அவ்வாறிருக்க, இப்பொழுது வெயிலுக்குப் பெயர் போவதாயிருக்கிறது. சென்ற சனிக்கிழமையன்று வெயிலின் உக்கிரம் 93 டிக்கிரி இருந்தது. கையிலிருப்பதை வயலில் போட்டுவிட்டு, தாயைப் பிரிந்த சேயைப் போல் மழை முகம் காணாமல் விவசாயிகள் தவிக்கிறார்கள். வருண பகவானுக்கு எப்பொழுது இரக்கச் சித்தம் ஏற்படுமோ! பர்மாவின் சரித்திரத்திற்கே முற்றும் மாறாக பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டு வருகின்றன.

---

## பர்மா செட்டியார்கள் சங்கம் 9-வது வருடக் கூட்டம்.

ஆவணி மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலையில், பர்மா நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தின் ஒன்பதாவது வருடப் பூர்த்தி கூட்டம, அதன் காரியாலயத்தில் ரங்கூனில் நடைபெறும்.

# சட்டமறுப்பு இயக்கம்.

### தண்டனைஅடைந்த நகரசபைத்தலைவர்

கண்ணனூர் நகரசபைத் தலைவர் திரு சாமியல் ஆசன் என்பவர் சட்டமறுப்பியக்கத்தில் ஈடுபட்டதற்காக 18 மாதத் தண்டனை யடைந்து மீண்டவர், சென்னை சர்க்கார் அவருக்கு ஒரு உத்தரவு அனுப்பியிருக்கின்றார்கள். அதில் அவர் தம் பதவியை சட்டப்படி ராஜிநாமா செய்துவிட வேண்டுமென்றும், உபதலைவரிடம் சார்ஜ் ஒப்புவிக்க வேண்டு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

### ஸ்ரீமதி கமலாதேவி கைதி.

மறியல் தினவிழா சம்பந்தமாக அலகாபாத்தில்ஊர்வலம் நடத்திச்சென்றதற்காக ஆகஸ்டு 28-ந் தேதி ஸ்ரீமதி கமலாதேவி சர்மா கைதுசெய்யப்பட்டார்.

### சிறையில் பிரசவம்.

வேலூர் சிறையில் தண்டனை அனுபவிக்கும் ஸ்ரீமதி டி. குமார்த்தி ஜானகிபாய் கர்ப்பணியாகி இருந்தவர் 20—8—32-ந் தேதி ஓர் பெண் குழந்தையைச் சிறையில் பிரசவித்தார், கவர்ன்மெண்டு பெண்ட்லண்டு ஆஸ்பத்திரியில் சிகிச்சிக்கப்பட்டு வருகிறார்.

### சுயராஜ்யபவன முற்றுகை

சுயராஜ்ய பவன முற்றுகையில் கலந்து கொண்டதற்காக பிரோஸ் சக்தி என்பவர் கிரிமினல் திருத்தச்சட்டத்தின் 17-வது செக்ஷன்படி ஒரு வருடக் கடுங்காவல் தண்டனையும்100ரூ அபராதமும்தவறினால் மீண்டும் 3 மாதத்தண்டனையும் விதிக்கப்பட்டார்.

### டாக்டர் கிச்சுலு

அரசாங்கத்தின் உத்திரவுக்குமீறி தடை செய்யப்பட்ட இடங்கட்குப் போக முயன்றதுபற்றிக் கைதுசெய்யப்பட்ட டாக்டர் கிச்சுலுவுக்கு அமிர்தசரஸ் முதல்தா மாஜிஸ்திரேட் 2வருடக் கடுங்காவல் தண்டனையும் இருநூற்றி ஐம்பது ரூபாய் அபராதமும் கட்டத்தவறினால் 6 மாதம் அதிகத் தண்டனையும் விதித்தார்.

### சென்னையில் கைது.

ஆகஸ்டு 20ந்தேதி சென்னையில் திரு. முனுசாமி செட்டியின் தலைமையிலும் பிறகு திரு. குமாரசாமி அய்யர் தலைமையின்கீழும் 23 தொண்டர்கள் தேசிய ஊர்வலம் நடத்தியதால் கைதுசெய்யப்பட்டு போலீஸ் கமிஷனர் ஆபீஸில் ரிமாண்டில் வைக்கப்பட்டனர்,

### திரு சுப்பராவ் விடுதலை.

சென்னை ராட்டன் பஜார் ரோட்டில் மறியல் செய்ததின் சம்பந்தமாக 6 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட சுவராஜ்யா பத்திரிகையின் உதவியாசிரியர் திரு. சுப்பராவ் ஆகஸ்டு 26-ந் தேதி விடுதலை செய்யப்பட்டார்.

### காங்கிரஸ் ஆசிரமம் சோதனை.

27-ந்தேதி அலகபாத் போலீசார் இயாப்பூரிலுள்ள காங்கிரஸ் ஆசிரமத்தைச் சோதனை செய்ததன் பயனாக 7 காங்கிரஸ் தொண்டர்களை கைது செய்தனர்.

### கோர்ட்டில் காங்கிரஸ் புல்லட்டின்.

கோதாவரி ஜில்லா நீதிபதி முன்பு ஒரு வழக்கு விசாரணையாகிக் கொண்டிருந்தபோது நாராயண ராஜு என்ற ஒரு காங்கிரஸ் தொண்டர் காங்கிரஸ் புல்லட்டின்களை வழங்கினார். உடன் அவர் கைது செய்யப்பட்டார்.

### பாபு நரேந்திரகோஷுக்கு 6 மாதம்:

அரம்பாக்கைச்சேர்ந்த நரேந்திரகோஷ் மறியல் செய்ததற்காக 6மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார்.

### ஸ்ரீமதி லக்ஷ்மிபதி விடுதலை.

ஸ்ரீமதி லக்ஷ்மிபதி 25-ந் தேதி காலை வேலூரினின்றும் விடுதலை செய்யப்பட்டுச் சென்னைக்கு வந்தார்.

### பத்திரிகைப் பிரதிநிதி கைதி:

பிரீபிரஸ் பிரதிநிதியும் ஜில்லாபோர்டு அச்சாபீஸ் நிர்வாகஸ்தருமான திரு. சுகதேபிரசாத் காங்கிரஸ் நடவடிக்கைகளில் கலந்து கொண்டதற்காகக் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### விடுதலையானதும் கைதி.

ஆகஸ்டு 27-ந் தேதி பம்பாயில் நீண்ட சிறைவாசத்தின் பின்னர் விடுதலை யடைந்த திரு. வாமன் கபாதி உடனே மீண்டும் கைதுசெய்யப்பட்டு ஒருவருடக்கடுங்காவலும் 50 ரூ அபராதமும் கட்டத்தவறினால் மேலும் 3 மாதச் சிறைவாசமும் விதிக்கப்பட்டார்.

### துப்பாக்கிக்காகக் கைது.

காஹதி பஞ்சுக் கல்லூரி மாணவரான 22 வயதுடைய ஒருவரும் 18 வயதான இன்னொருவரும் மறைவாகத் துப்பாக்கி வைத்திருந்ததற்காக துப்ரிப் போலீசார் கைது செய்தனர்.

### தேடியவர் கைதியானார்.

பம்பாய் வாசியும் அவசர அதிகார சட்டத்தின்படி ஒரு குற்றத்திற்காக பம்பாய்ப் போலீசாரால் தேடிக் கொண்டிருக்கப் பட்டவருமான ஜெய் பிரகாஷ் நாராயணன் என்பவரை இரகசிய போலீசார் சென்னையில் கைது செய்தனர்.

### சுபாஷ்போஸ் நிலை.

சென்னை சிறையில் நோயுற்றிருக்கும் திரு. சுபாஷ்சந்திர போஸின் உடல் நிலைமையை நேரில் வந்து பரிசோதனை செய்தபோன டாக்டர் பி. சி. ராயை ஒரு பத்திரிகைப் பிரதிநிதி பேட்டிகண்டபோது அவர் திரு. சுபாஷ் பாபுவின் உடல்நிலை கவலைக்கிடமானதாயில்லையென்று கூறினார்.

### தாகூர்தாஸுக்குத் தடை.

ஆகஸ்டு 29-ந் தேதி பகல் ஒரு மணிக்கு முன் காசியைவிட்டுப் போய்விடவேண்டுமென வக்கீல் திரு. தாகூர்தாஸுக்கு ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதன்படி அவர் நடவாமையால் 29-ந் தேதி கைது செய்யப்பட்டார். அதே போன்ற ஒரு தடையுத்தரவைப் பெற்றிருந்த திரு. சகாதேவ் சிங் என்பவரும் நகரைவிட்டுப் போகாததால் கைதியானார்.

### லக்ஷ்மணபுரி சர்வாதிகாரி கைதி.

லக்ஷ்மணபுரியிலுள்ள காங்கிரஸ் சர்வாதிகாரி பண்டித ராமாதார மிஸ்ரா அமானுதல்லா நந்தவனத்தில் தேசியக்கொடி நாட்டவும் பிரசங்கம் செய்யவும் முயற்சித்தபோது கைது செய்யப்பட்டார்.

### ஸ்பெஷல் போலீசார்.

தம்லுக்கைச் சேர்ந்த 20 பேருக்குமேல் ஸ்பெஷல் கான்ஸ்டேபிள்களாக நியமிக்கப்பட்டிருப்பதாக அதிகாரிகளால் நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது.

### திரு. பாண்டேயின் விடுதலை.

மாஜி சட்ட சபை அங்கத்தினரும் அல்மோரா ஜில்லாபோர்டு தலைவருமான பண்டித பதரிதத்த பாண்டேயின் பி. எஸ். ஸி. வகுப்பில் படித்துக்கொண்டிருந்த குமாரன் கங்கையில் மூழ்கி இறந்துவிட்டதால் அவர் நிபந்தனையின்பேரில் விடுதலை செய்யப்பட்டார்.

### ஆலயத்தில் தேசீயக் கொடி

சென்ற சனிக்கிழமைதினம் நாமக்கல் காங்கிரஸ் கமிட்டியின் இரண்டாவது "சர்வாதிகாரி" யாகிய ஜனுப் அப்துல் கபார் சாயபுவால் கையொப்பமிடப்பட்டிருந்த பஹிஷ்காரத் அண்டு நோட்டீஸ்கள் சந்தைப்பேட்டையில் தொண்டர் ஸ்ரீமான் பத்மநாபனால் வழங்கப்பட்டன. பிறகு தொண்டர் வாசகசாலையில் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தபோது போலீசாரால் ஸ்டேஷனுக்கு இட்டுச் செல்லப்பட்டு அங்கு இரவு 12மணி வரையில் வைக்கப்பட்டு, பிறகு பிரம்பால் அடித்து எச்சரிக்கையோடு வெளியே விடப்பட்டார். 28ந்தேதி கடைசி ஞாயிற்றுக்கிழமையானதால் நாமக்கல் காங்கிரஸ்காரரால் ஸ்ரீரங்கநாதஸ்வாமி கோவிலின் கோபுரத்தில் ஒரு பெரிய தேசியக்கொடி கட்டப்பட்டது. சிலநேரமானதும் கோவில் அதிகாரிகளால் அது எடுத்து விடப்பட்டது.

### தாலுகா மகாநாடு.

கள்ளிக்கோட்டை தாலுக்கா மகாநாடு சம்பந்தமாய் 28-ந் தேதி காலை கைது செய்யப்பட்ட ஸ்ரீமான்கள் அகமத் கோயா கே, வி. நம்பியார், 20-வது கோள சர்வாதிகாரி கே. கே. ராமன் பரமேஸ்வர ஐயர் முதலியவர்களையும்மற்றும்25 பேர்களையும் போலீசார் 8-ந் தேதி மாலை இக்கர் சப்டிவிஷனல் மாஜிஸ்டிரேட் கான்சாகிப் ஹமீட் சாகிப் அவர்கள் முன்பு ஆஜர் செய்தனர். அவர்கள் யாவரையும் செப்டம்பர் மாதம் 1-ம் தேதி வரை ரிமாண்டில் வைத்திருக்குமாறு கனம் மாஜிஸ்டிரேட் உத்தரவு செய்தார்.

### லக்ஷாதிபதியின் குமாரர் கைதி.

பம்பாய் மார்வாரி சமூகத்தைச் சேர்ந்த லக்ஷாதிபதியான ராஜா பகதூர் கோவிந்தலால் சிவலால் மோதிலாவின் குமாரரான மண்டிலால் கோவிந்தலால் பித்தி இரவு 12 மணிக்குச் சற்று முன்பு விசேஷ அதிகார அவசரச்சட்டப்படி கைது செய்யப்பட்டார். அதே பிரிவின்படி மற்றொருவரும் கைதியானார். 2 தொண்டர்கள் மறியலுக்காகக் கைது செய்யப்பட்டனர்.

---

## ஸ்ரீவில்லிப்புத்தூர் தேர் சாய்ந்தது.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் இம் மாதம் 25-ந் தேதி திருவிழா நடைபெற்றபோது கோவிலுள் பெரிய தேரை பலர் சேர்ந்து இழுத்தனர். தேர் நிலைக்கு வரவில்லை. ஆகையால் 500-பேர் சேர்ந்து பலமாக இழுக்க அத்தேர் தன் பாதையை விட்டு ஒரு புறமாக ஒதுங்கிச் சென்று ஒரு அச்சாபீஸ் மீது மோதியது. அதன் சக்கரங்கள் பூமியில் பதிந்து விட்டன. நல்லவேளையாக ஒருவருக்கும் விபத்தேற்படவில்லை.

---

## ஒரு திருமணம்.

பழனி மலையப்பசாமி வைத்தியசாலையின் சொந்தக்காரரும் டாக்டருமாகிய திருவளர் செல்வன் C. P. சாமி அவர்கட்கும் கரூர் தாலுகா ஆண்டான் கோவில் திரு. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் புதல்வி திருவளர் செல்வி மாலையம்மாளுக்கும் செப்டம்பர் மாதம் 5ந்தேதி திருமணம் நிகழும் என்றறிவிக்கப் படுகிறது.

# குமரன்

காரைக்குடி
ஆங்கிரஸ-ஹூ ஆவணி-மீ களஉ

## வீண் செலவு.

பணவரவு பலவிதத்திலும் குறைந்து நிற்கிறது. செலவினங்கள் பெரும்பாலும் குறையவில்லை. செலவைக் குறைக்க நினைப்பவர்கள் மக்கட்குப் பெரிதும் உபயோகமான செலவுகளைக் குறைக்க முற்படுகின்றனரே யன்றி வீண் செலவுகளைக் குறைக்க முற்படவில்லை. சிலர் முன்வந்தாலும் முடியவில்லை. காரணம் ஜாதி வழக்கம், கட்டுப்பாடு, பிறர் கேலி செய்வார்களே என்ற நினைப்பு ஆகியவையாக இருக்கின்றன. குடும்பத்தில் நடைபெறும் கல்யாணம் முதலிய சடங்குகளால் தான் ஹிந்துக் குடும்பங்கள் வறுமை நிலைக்கு வந்து சேர்கின்றன வென்பது சிறிது கூர்ந்து நோக்குவார்க்கு விளங்காமற் போகாது. கல்யாணமென்றால் ஒரு பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்வதைத் தவிர வேறொன்றுமில்லை. அதற்குப் பலரை சாட்சியாக வைத்து ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வதே கல்யாணத்தின் உட்பொருளாகும். தற்கால நடைமுறையை நோக்கினால் எல்லாம் தலைகீழாகி நிற்பதைக் காணலாம். பல கல்யாணங்கள் பெண்ணுக்கு மாப்பிள்ளையையும் மாப்பிள்ளைக்குப் பெண்ணையும் பார்க்க முடிகிறதில்லை. கல்யாணத்தின் முழுப்பொறுப்புமுள்ள பெண் மாப்பிள்ளைகள் ஒருவரையொருவர் அறியாமலே தாலிக்குக் கழுத்துக் கொடுக்க வேண்டிய நிலைமை சமூக வழக்கமாக இருக்கிறதென்றால் கல்யாணதத்துவம் எவ்வளவு தூரம் பாழடைந்திருக்கிறதென்பதை உணரல் வேண்டும். இஃதொருபுறங் கிடக்கட்டும். இருவரைச் சோடி சேர்க்கும் ஒரு சடங்குக்கு 40,000 செலவிட வேண்டிய அவசியமென்னவென்பது தான் விளங்கவில்லை. இதற்கு ஆயிரக்கணக்கான ஜனங்களை அழைத்துப் பத்துநாள் வரை கொண்டாட்டம் நடத்த வேண்டுமென்பதென்ன அவசியம்? ஒரே நாளில் ஒரே நாழிகையில் சந்தோஷமாக நடத்திவிட்டாலென்ன? பணத்தை அழிப்பதில் அடையும் பலனென்ன? இதுவரை செய்த செலவினால் இன்று அடைந்திருக்கிற அபிவிருத்தியென்ன? எட்டு நாள் கல்யாணத்தை ஒழித்து ஒரு நாளில் செய்வதால் ஒரு குறைவும் வரப்போவதில்லை. வீண் செலவு குறையும். சீட்டாடுவது குறையும். மற்ற வியாபாரிகள் அடிக்கும் கொள்ளை குறையும். அதிகச் சாப்பாட்டினால் வருகிற நோய் குறையும். கடனுக்கு வகை சொல்கிற வேலை குறையும். மற்றொன்றுங் குறைவதற்கில்லை. இதைப்போலவே இறந்த காலத்திலும் பின்னும் செய்யப்படும் சடங்குகளும் பணத்தை விழுங்கும் பெருவயிறு படைத்த பூதங்களாக இருப்பதைக் காணலாம். பரமார்த்திகத்தில் நம்பிக்கையுள்ளவர்களும் முன் பின் யோசனையின்றி மூர்க்கமாகப் பொருளை வாரி இறைக்க வேண்டிய அவசியமொன்றுமில்லை. வெற்றிலை பாக்கு தானம் செய்ய வேண்டுமென்று வழி காட்டுபவர் சொன்னால் வெள்ளி வெற்றிலைப்பாக்கு தானம் செய்ய வேண்டும் என்று கேட்கிறோம். இதற்கு மேல் தங்கத்தில் வெற்றிலை பாக்கு வேண்டுமென்று அடுத்தவருடைய மனப்பான்மை ஏற்படுகிறது. மூன்றாமவர் அதில் இரண்டு வைரத்தைப் பதிக்கலாமா என்று கருதுகிறார். இப்படியொரு போட்டி யேற்பட்டு வருகிறது. போட்டி போட்டு ஒருவருக்கு மற்றவர் மேல் என்று கருதுமாறு நடந்து கொள்ள எண்ணுவதால் சடங்குகள் நீச்சு நிலையில்லாமல் செலவை அதிகப்படுத்திக் கொண்டு வளர்ந்து வருகின்றன. இந்தப் போட்டியின் வளர்ச்சியினால்தான் செய்கிற காரியத்தின் உட்பொருள், பயன் ஆகிய ஒன்றும ஞாபகத்துக்கு வாராமல் மறந்து போகின்றன.

இம்மாதிரியான செய்கைகளை பணம் மலிந்திருக்கின்ற வரையில் சமாளிக்க முடிந்தது. தற்போதைய நிலையில் முடியாதென்பது சாதாரணமாக யாவருமுணர்ந்ததேயாகும். என்றாலும் பொருளுக்கு வழி செய்ய முடிகிறவரை காரியங்களை நிறுத்தாமல் நடத்த முன் வருகின்றனர். பணத்துக்கு வழியேற்படவில்லையென்றால் காரியங்கள் நின்று விடுகின்றன. விசேடங்கள் தமக்கிருக்கிற பணத்தின் அளவுக்கேற்ப நடைபெற வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்படவில்லை. ஆனால் அவைகளுக்காக எப்படியும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற நிலைமை உரம் பெற்று நிற்கிறது. இவ்வளவு பண நெருக்கடியிலும் விசேஷ காலங்களின் செலவு குறைவுபடவில்லை. அவற்றில் நடைபெறும் அற்பமான காரியங்களைக் கூடக் கைவிட முன் வருகிறார்களில்லை.

பெரிய பெரிய ஜாதியக் கூட்டங்களைக் கூட்டி உபதேசிக்க உபதேசங்கள் மேட்டில் பெய்த மழைபோலாகி விட்டன. அந்த நாள் பணம் கொழுத்திருந்தது. இன்று பண நிலைமை சீர்கெட்டிருக்கிறது. இளைஞர்கள் ஊக்கங் கொண்டெழுந்து வேலை செய்வார்களானால் இன்று பயன் தரக் கூடுமென்றெதிர்பார்க்கலாம். செல்லமும் செல்வாக்குமுள்ளவர்களின் மனம் இந்தக் கஷ்ட காலத்திலாவது நேர் வழிக்கு வரவேண்டுமென்று விரும்புகிறோம். முன் பணமில்லாதவர்கட்கும் நடுத்தரமானவர்கட்கும் செல்வர்கள் உதவி செய்ய வேண்டிய நிலைமையிருந்தது. இன்று அது மாறி செல்வர்களாக இருந்தவர்கட்கு மற்றவர் தயவு காட்டும்படி நிலைமை யேற்பட்டு விட்டது. வண்டி ஓடத்திலும் ஓடம் வண்டியிலும் வரக்கூடுமென்று அன்று செய்த பிரசங்கங்கள் இன்று அனுபவத்தில் இருக்கின்றன. இப்பொழுதாவது வீண் செலவை யொழித்து இன்ப வாழ்வுக்கு அடிகோல வேண்டிய தவசியமாகும்.

---

## உள்ளூர்ச் செய்தி.

**காலநிலை:—** இந்த வாரம் மழை நிரம்பப் பெய்தது. கொஞ்சம் அளவு கடந்துவிட்டதென்றாலும் தகும். நீர் நிலைகள் ஜலம் நிரம்பியிருக்கின்றன. வான மிருண்டும் மழையைக்கொட்டும் நிலையிலுமிருக்கின்றது. சீர்கெட்ட பாதைகளெல்லாம் சகதியாயிருக்கின்றன.

**சந்தைப்பேட்டை:—** புதுச்சந்தைப் பேட்டை ஜனநெருக்க முடையதும் ஊருக்குப் பிரயோசன காமானதுமாகும். அங்கு சந்துகளும் பெரிய ரஸ்தாவும் அவ்வளவு சீரான நிலைமையிலில்லை. இந்த நிலைமையில் இவ்வாரத்திய மழையும் ஜனக்கும்பலும் சேர்ந்தபோது போக்குவரவு மிக மிகக் கஷ்டமாகி விட்டது. எங்கும் சகதியாயிருந்தமையால் சமான்வாங்கச் சென்றவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுப் போனார்கள். வண்டிசட்கு ஒரு அடி நகர 5 நிமிஷம் வேண்டிவந்தது. செவ்வாய்க்கிழமை காலையில் சில வண்டிமாடுகள் நடக்கமுடியாமல் படுத்துக் கொண்டன. முனிசிபாலிடியார் இதில் கவனம் செலுத்த வேண்டுவதாகும்.

**அம்மை நோய்:—** அம்மை நோயின் கொடுமை குறைந்துவிட்டது. இதற்கும் ஒருவாறு சீதோஷ்ண நிலைமையே காரணமென்று குறிப்பிடலாம்.

**செட்டிநாட்டு ஸ்பெஷல்:—** காசிக்குச் சென்றிருந்த செட்டிநாட்டு ஸ்பெஷல் ரயில் வண்டி ஆவணி 15-ந்தேதி காலையில் வந்து சேர்ந்தது. சுமார் 1½ மாதங்களாகப் பல ஊருக்கும் சென்றிருந்த பிரயாணிகளை வரவேற்கும் பொருட்டு அவரவர்களுடைய உறவினர்கள் பலர் மோட்டார்கார்களிலும் குதிரை வண்டிகளிலும் ரயில்வேஸ்டேஷனில் வந்து குழுமினர். மேற்படி ஸ்பெஷல் புறப்பட்ட அன்றிருந்த பரபரப்பு 15-ந் தேதியிலும் காணப்பட்டதென்று சொல்லலாம். பிரயாணிகள் வந்து சேர்ந்தும் க்ஷேமம் விசாரித்துக் கொண்டதத்தம் மூட்டை முடிச்சுகளுடன் இறங்கினர். அது முதல் சுமார் 7-மணி வரையிலும் ரயில்வேஸ்டேஷன் ரோட்டில் அப் பிரயாணிகளையும் அவர்களுடைய சாமான்களையும் ஏற்றிக் கொண்டு வண்டிகளோடிய வண்ணமாகவே இருந்தன. அயலூர் வாசிகளாகிய பல பிரயாணிகள் 15-ந் தேதி காரைக்குடியிலேயே தங்கியிருந்தார்கள்.

---

## தேவகோட்டை பஞ்சாயத்து போர்டு.

(ஒரு நிருபர்.)

இதன் சாதாரணக் கூட்டம் ஒன்று 29—8—32 திங்கட்கிழமை காலை 11 மணிக்கு தலைவர் திருவாளர் உ. ராம. மெ. சு. மெ. மாணிக்கவாசகம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. எட்டு அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

ஜூன்-மீ 21, 22 தேதிகளில் மெம்பர் திரு. எஸ் சுப்பிரமணிய அய்யரவர்களால் கேட்கப்பட்டிருக்கிற கேள்விகளுக்கும் சப்ளிமெண்ட் கேள்விகளுக்கும மெம்பர் திரு ஆர். கிருஷ்ணய்யங்கார் அவர்கள் கேள்விகளுக்கும் சப்ளிமெண்ட் கேள்விகளுக்கும முறையே தலைவரால் பதில் சொல்லப்பட்டது. பிறகு நடவடிக்கை ஆரம்பமாயிற்று.

### அதிகப்படி லாரிகள் வாங்க.

குப்பையை அப்புறப்படுத்துவதற்கு ஒரு அதிகப்படியான மோட்டார் லாரியும ஜலதாரை தண்ணீரை அள்ளுவதற்கு ஒரு மோட்டார் லாரியும் வாங்கவேண்டுமென்பதான ஆபீஸ் நோட்டு ஆலோசனைக்கு வந்தது. அதன் செலவும் அதன்மூலம் வரும் படியும் சொல்லப்பட்டு பெருந்த விவாதத்தினிடையே இரண்டுக்கும் டெண்டர்கள் கேட்கலாமென்றும் பிறகு இந்த விஷயம் யோசிக்கப்படலாமென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

### வைஸ் பிரசிடெண்டுக்கு அதிகாரம்.

சில குறிப்பிட்ட அதிகாரம் நீங்கலாக பாக்கி எல்லா தலைவர் அதிகாரங்களையும் உப தலைவருக்கு கொடுக்கப்படவேண்டிய விஷயம் சிறிது விவாதத்திற்கு பிறகு கொடுக்கலாமென்று தீர்மானிக்கப்பெற்றது.

### வருஷாந்தர அறிக்கை.

இந்த போர்டின் 31, 32-ம் வருஷ வருஷாந்தர அறிக்கை படிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பெற்றது.

பிறகு மீட்டிங் விஷயங்கள் அதிகமாக இருப்பதாலும் மணி 1-க்கு மேலாகிவிட்டதாலும் மற்ற விஷயங்கள் அடுத்தமீட்டிங்கிற்கு ஒத்திவைக்கப்பெற்றது.

---

## செட்டியார் சாப்பாட்டில் விஷம்.

### வங்கமுஸ்லிம்கள் வேலை.

நால்வர் கைதியாயினர்.

19-8-32 சாயங்காலம் 6 மணி சுமாருக்கு ரங்கூன், அப்பர் பசுமந்தான் ரோட்டில் 113 ஆம் நெம்பர் வீட்டில் லேவாதேவி தொழில் செய்துவரும் சுப. கரு. ராம; மு. ராம. சொ. செட்டியார் கடைச் சொந்தக்காரர்களுடைய சமையற் கட்டில் கருப்பனும் வடிவேலும் ஆகாரம் தயாரித்துக் கொண்டிருந்தார்கள். சமையல் நடந்து கொண்டிருக்கும் வேளை பார்த்து, பக்கத்து வீட்டிலிருக்கும் 3 வங்கதேசத்து முஸ்லிம்கள், நெருப்பெடுக்க வந்திருப்பது போல் நடித்து, சமையற்காரர்கள் வேறு பக்கம் திரும்பிக் கொண்டிருக்கும் தருணம் பார்த்து குழம்பில், கொண்டுவந்திருந்த மருந்தைப் போட்டுவிட்டார்களாம். அச்செயலோடு அவர்கள் நிற்கவில்லை. பிற பதார்த்தங்களிலும் மருந்தைப் போட்டுவிட்டார்களாம். வடிவேலு என்ற சமையற்காரன் அம் முஸ்லிம்கள் நடத்தையை நேரில் பார்த்துவிட்டு பதார்த்தங்களிலிருந்து மருந்துகளை எடுத்துவிட்டான். அவ்விதம் எடுப்பதைக் கண்ட முஸ்லிம்கள் அவனிடமிருந்த மருந்தைப் பறித்துக்கொண்டு ஓடி மறைந்து போய் விட்டார்கள். இச்சம்பவம் குறித்து டவுலோம்பியான் போலீஸ் ஸ்டேஷனில் ரிப்போர்ட் செய்யப்பட்டது. அதன் பேரில் போலீஸ்காரர்கள், வங்க தேசத்து முஸ்லிம்களில் நால்வரைக் கைது செய்துள்ளார்கள்.

அப்பர் பசுமந்தானில் வேலையற்றுத்திரியும் பேர்வழிகள் அதிகமாயிருந்து வருவதாயும், அதுபற்றி மேலதிகாரிகளுக்கு தெரிவித்து தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளச் செய்யும்படியாகவும், அவ்விரு கடைச் செட்டியார் ஏஜண்டுகள், செட்டியார்களின் சங்கத்திற்குக் கடித மெழுதியுள்ளார்கள்.

---

## இராமநாதபுரம் ஜில்லா கலக்டர் மாற்றம்.

இராமநாதபுரம் ஜில்லா கலக்டராகவிருக்கும் திரு. எம். நரசிம்ம பந்துலுகாரு திருநெல்வேலி டிவிஷனுக்கு மாற்றப் பட்டிருப்பதாய்த் தெரிகிறது.

---

## தங்க ஏற்றுமதி

பம்பாய், ஆக. 29.

சென்ற வாரம் தங்க ஏற்றுமதி சற்று உயர்ந்து விட்டது. இதற்கு முன் வாரத்தில் 56 லட்சம் பெறுமான தங்கம் ஏற்றுமதி செய்யப்பட்டது. இந்த வாரத்தில் 120 லட்சம் பெறுமான முள்ள தங்கம் அனுப்பப் பட்டிருக்கிறது.

---

## சர்வதேச சங்கத்திற்கு டிவாலரா தலைவர்.

செப்டம்பர் மாதத்தில் ஜினீவாவில் நடக்கும் சர்வதேசச் சங்கக் கவுன்சில் தலைவர் பதவி ஸ்வாதீன அயர்லாந்துக்குக் கிடைக்கும். ஐரிஷ் பிரதிநிதிக் கோஷ்டித் தலைவரான மிஸ்டர் டிவாலரா தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவார். அதற்குள் ஆங்கிலோ—ஐரிஷ தகராறு தீராவிட்டால் அந்தப் பிரசினையை ஸர்வதேச சங்கம் எழுப்பும்.

ஐயர்லாந்துக்குப் பல சிறிய தேசங்களெல்லாம் ஆதரவளிக்கின்றன. சங்கக் கௌன்சிலில் வல்லரசுகள் அதிக சலுகைபெற்று வருவது இத்தேசங்களுக்குப் பிடிக்கவில்லை.

---



## முதன் மந்திரி சுற்றுப்பிரயாணம்.

### செப்டம்பர் 7-ந்தேதி சென்னையைவிட்டுப் புறப்படுவார்.

சென்னை, ஆக, 26

சென்னை சர்க்கார் முதன் மந்திரி திவான்பகதூர் பி. முனுசாமி நாயுடு பின் கண்டவாறு சுற்றுப் பிரயாணஞ் செய்வார் என்று தெரிகிறது:—

7-ந் தேதி மாலை 7-30 மணிக்குச் சென்னையை விட்டுப் புறப்பாடு.

8-ந் தேதி காலை 9-1 மணிக்கு விருதுநகரை யடைதல்.

9-ந் தேதி சாத்தூர்.

10-ந் தேதி கோவில்பட்டி, தூத்துக்குடி.

11-ந் தேதி பாளையங்கோட்டை.

12-ந் தேதி ஸ்ரீ வைகுண்டம், திருச்செந்தூர்.

13-ந் தேதி மூலக்கரைப்பேட்டை.

14-ந் தேதி திருநெல்வேலி.

15-ந் தேதி அம்பா சமுத்திரம்.

16-ந் தேதி குற்றாலம்.

17-ந் தேதி சங்கரநயினார் கோவில்.

18-ந் தேதி சென்னைக்குத் திரும்புதல்.

---

## காதலா வெறியா?

### கொங்கையையறுத்த சீனப்பெண்.

பர்மாவிலிருந்து பிரசுரமாகும் 'ந்யூ லைட் அப் பர்மா' என்ற பத்திரிகையோர் விசேஷமாதிரியான காதல் கதையை வெளியிடுகின்றது. விவரமாவது:—

அப்பர் பர்மாவைச் சேர்ந்த கதா ஜில்லாவிலுள்ள தபெய்சின் என்ற கப்பல் துறைமுகத்தில் சீனனொருவன் குடியிருந்தான். திடீரென அவனுக்கு காய்ச்சல் கண்டுவிட்டதால் தளர்ச்சி காணப்பட்டது. அதனைப் பார்த்த மனைவியானவள் தனது கணவன் சொஸ்தமடையும் பேராவல் கொண்டு தன் மார்பிலிருந்து சதையை அறுத்தெடுத்துக் கறி சமைத்து அதனை அவனுக்கே கொடுத்தாள். நோயுண்டிருந்த அவன் சமைக்கப் பட்டிருப்பது என்ன மாமிசமென்று கேட்க முதலில் அவள் கூறவில்லை; அப்பால் வற்புறுத்தலின்மீது தான் அன்புமேலீட்டால் செய்ததைக் கூறினாள். உடனே மார்பைச் சோதிக்க உண்மையாகவே சதையை அறுத்திருந்தாளென்று தெரிந்தது. ஏராளமாக அறுத்துவிட்டதால் அவளால் காயத்தைக் குத்தித் தைத்துக்கொள்ளமுடியவில்லை. இரத்தமும் கசிந்து கொண்டிருந்தது: உடனே சீனன் மனைவியை ஆஸ்பத்திரிக்குக்கொண்டு சென்று டாக்டரிடம் பரிசோதிக்குமாறு வேண்டிக்கொண்டான் டாக்டர் 20 ரூபாயிடை சதை அறுத்தெடுக்கப் பட்டிருப்பதாகக் கூறினார். அன்றி அவ்வளவு அபாயகரமாயில்லை யென்றும், சீக்கிரத்தில் குணமடைந்துவிடுவாளென்றும் தெரிவித்தார். அப் பெண்ணுக்கு மிக சீக்கிரத்தில்குணமாகி விடுமென்ற நம்பிக்கை யிருந்தது. மயக்கமருந்து கொடாமலே அவள் காயங்களைத் தைத்துவிடுமாறு வேண்டிக்கொண்டாள். போலீசார் அவள் மீது 309ம் பிரிவின்படி நடவடிக்கை யெடுத்துக் கொண்டிருக் கிறார்கள். அவள் தன் கணவன் மீதிருந்த எல்லையற்ற காதலாலேயே அத்தனையும் செய்தாளென்று கூறுகிறாள்.

---

# இந்தியாவின் நிலைமை.

## ஆசிரியர் ராதா கிருஷ்ணனின் பிரசங்கம்.

கல்வி விற்பன்னர்களுடே ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்காக ஏற்பட்டுள்ள சர்வதேசக் கமிட்டியின் கூட்டங்களில் இந்திய தத்துவ சாஸ்திர ஞானியாகிய ஸர். எஸ். ராதாகிருஷ்ணன் அதிகப் பங்கெடுத்துக்கொண்டு வருகிறார். சென்ற வியாழக்கிழமை (மெயில் வாரம்) அவர் செய்த பிரசங்கத்தை நீதியான வழியில் ஆயுதப் பரிஹாரணத்தை ஏற்படுத்துவதற்காகப் பாடுபடும் கமிட்டியின் தலைவரும் கூட்ட நடவடிக்கைகளில் கலந்துகொண்ட மற்றோரும் வெகுவாகப் போற்றினார்கள்.

ஆசிரியர் ராதாகிருஷ்ணன் பேசியதாவது:—இது சர்வதேச சங்கத்தின் உயிர் நாடி போன்றது. பல தேசங்களும் ஆயுதங்கள் மூலமோ, அல்லது காப்பு வரிகள் மூலமோ, ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதற்கு இது எதிரிடையாக வேலை செய்கிறது. இந்தக் கமிட்டியின் மூலமாகப் பல காரியங்களைச் சாதித்திருந்தபோதிலும் பாக்கி செய்ய வேண்டிய வேலை அதிக மிருக்கிறது. நாம் வயதானவர்களென்றும், காலக்கிரமத்திலேயே மாறுதலேற்படுமென்று நினைக்கிறவர்களென்றும் சிலர் சொல்லுகிறார்கள். நமது விருப்பங்களுக்குத் தகுந்த பலன் ஏற்பட்டு விடவில்லை யென்பது வாஸ்தவமே. ஒரு கதையில் கடவுளுக்கும் சைத்தானுக்கும் நடந்த போராட்டத்தில் தடஸ்தமாக இருந்த தேவதூதர்கள் நிலைமையில் நாமிருக்கிறோம். அவர்களை மேலுலகமும் ஏற்றுக்கொள்ளவில்லை; கீழுலகமும் அவர்களை நிராகரித்துவிட்டது. உலக சரித்திரத்தில் ஏற்படும் நெருக்கடியான காலங்களில் எச்சரிக்கையாக விருக்கும் லிபரல்களின் கதி இதுதான்.

### பொறுமையும் சந்தேகமும்.

ஆனால் சிலசமயங்களில் அதிக எச்சரிக்கையாக விருப்பது குற்றமாகிவிடக்கூடும். அப்படிப்பட்ட சந்தர்ப்பம் இது, தேசங்கள் பேராசையும், பொறுமையும், வெறுப்பும் சந்தேகமும் கொண்டிருக்கின்றன. போராட்டம் ஏற்படாமல் தடுக்க வேண்டுமானால் காலப்போக்கில் எல்லாம் சரியாகி விடுமென்ற நம்பிக்கையில் சும்மாவிருந்து விடக்கூடாது; நாம் முன் வந்து அதைச் சீக்கிரத்தில் மாற்ற முயற்சிக்க வேண்டும். சரியான வழியைக் காட்டுவதற்கு வேண்டிய சன்மார்க்க, அறிவு சக்திகளை உண்டுபண்ணவேண்டும். யுத்த மனோபாவத்தின் சக்தியைக் குறைத்துப்புதியஎண்ணங்கள் உதிக்கும்படி செய்ய வேண்டுமாயின், அறிவைப் பரப்புவது முலமாகவே அது சாத்தியப்படும். வெறும் மூளை அறிவுமட்டில்போதாது. சென்ற மகாயுத்தத்தில் அதுபோதாதென்பது நிரூபணமாகி விட்டது. சமாதானத்தையும் நல்லுணர்ச்சியையும் போதிக்கும் நம் மதங்களால் மிகக்கோரமான யுத்தத்தைத் தடுக்க முடியவில்லை. யுத்தமானது பொருளாதாரத் துறையில் மிகுந்த கஷ்டத்தை விளைவிக்குமென்ற அறிவிருந்தும் நாம் பாழ்படுத்தாமல் தடுக்க முடியவில்லை. சட்ட திட்டத்தில் நமக்கு இருந்து வரும் மதிப்பானது சாமான்ய யுத்த தர்மங்களுக்கு நம்மை பவ்யப்படுத்தமுடியாது. நாம் கலைகளிலும் அழகிலும் மிகுந்த அன்புடையவர்களாக விருந்தும் பல நிரந்தங்கள் அழிக்கப்பட்டதை நம்மால் தடுக்க முடியவில்லை.

மனித சமூகம் முழுவதையுமே நேசிக்கும்படி செய்யக்கூடிய கல்வி நமக்குவேண்டும். நமது வாலப்பருவத்தில் கொடிகளை ஆட்டுவதன் மூலமும் பாடல்களைப் பாடுவதன் மூலமும் தேசத்தை அபிமானிக்கவும், யுத்தத்தின் பெருமையை மதிக்கவும் நமக்குக் கற்றுக்கொடுத்தனர். இப்பொழுது தலைக்கிளம்பப் போகும் தலைமுறையினருக்கு மனித சமூகத்தை நேசிக்கவேண்டிய அவசியத்தையும், சமாதானத்தின் மகிமையையும் கற்பிப்போம். மனித சமூகம் ஒன்றென்பதையும், அதற்கு நாம் கடமைப்பட்டிருக் கிறோமென்பதையும் அவர்களுக்கு நாம் உபதேசிப்போம்.

### சில உண்மைகள்.

உலகிற்கு உபதேசம் செய்வாரே உலகத் தலைவர்களாக இருக்க வேண்டும். அவர்களே நல்ல எண்ணங்கள் ஏற்படும்படி செய்யக்கூடும். இந்த விஷயத்தில் இவர்களுடைய மனோபாவத்தைத் திருப்பும் வேலையில் நாம் இறங்க வேண்டும். இல்லையேல் நாகரிகம் அழிந்துபோய் விடும். நமது ராஜீய ஏற்பாடுகள் பொருளாதார நிலைமைக்கும் சாஸ்திரீய அபிவிருத்திக்கும் ஏற்றவைகளாக இருக்கவில்லை. ஒவ்வொரு தேசமும் தனது செலாவணி முறையை வைத்துக் கொண்டதே இப்பொழுது உலகெங்கும் ஏற்பட்டிருக்கும் பொருளாதார சுணக்கத்திற்கு முக்கிய காரணம். செல்வந்தர்கள் சொல்லுகிறபடி ஆடும் காலமாக இது இருக்கிறது. உலக ஒற்றுமை ஏற்படும் காலத்தை நாம் நெருங்கி வந்தும் தனவந்தர்கள் இப்போதைய நிலைமையே நீடித்திருக்கும்படி செய்ய விரும்புகிறார்கள்.

எல்லா தேசங்களையும் சரி சமத்துவமாகப் பாவிக்கும் மனோபாவத்தை ஏற்படுத்துவது சுலபமான வேலையில்லை. அது மனித சமூகத்திடத்தில் நம்மைப் பாசத்தால் கட்டுப்படுத்துவதாக இருக்கிறது. பிற ஜனங்களைச் சுரண்டுவோர் அவ்விதம் செய்யாமல் தடுக்க வேண்டிய கடமையை ஏற்படுத்துவதாக இருக்கிறது. சீனக்காரர்களும் இந்தியர்களும் தங்களுடைய சம்பிரதாயங்களாலும், பழக்க வழக்கங்களாலும் சமாதானத்திலேயே நாட்டமுடையவர்கள். ஆனால் அவர்களுடைய இப்போதைய நிலைமையும், பொருளாதாரத் தேவைகளும் சாந்தமுறை பிசகு என்றும் யுத்தமனோபாவமே சிறந்ததாமென்றும் அவர்கள் யோசிக்கும்படி செய்திருக்கின்றன. அவ்விதம் அவர்கள் தங்களுடைய மனோபாவத்தை மாற்றிக்கொண்டு விடுமுன் எல்லோருக்கும் நீதியும் சரிசமத்துவமான அந்தஸ்தும் கிடைக்கும்படி சர்வதேச சங்கம் செய்யவேண்டும்.

### சீனவும் இந்தியாவும்.

சீனவிலும் இந்தியாவிலும் இப்பொழுது நிலவியிருந்துவரும் நிலைமையில் ஒருவரும் திருப்தி அடைவதற்கில்லை. சீனவுக்கும் ஜப்பானுக்கும் யுத்தம் நடக்கிறது. இந்தியாவில் அவசரச் சட்ட ஆட்சி நடைபெறுகிறது. ஆயிரக்கணக்கான ராஜீயவாதிகள் சிறையில் கிடந்துழல்கின்றனர். இந்த நிலைமைக்கும் போராட்ட நிலைமைக்கும் அதிக வித்தியாசமில்லை. சர்வதேச சங்க உணர்ச்சியிலும், சமாதானம், சமத்துவம், சுய நிர்ணயம் இவைகளிலும் நம்பிக்கையுடையவர்கள் கீழ்த்தேசங்கள் இவ்விதம் அல்லல்படுகையில் என்ன செய்கிறோமென்று நினைக்கிறீர்கள்?

சர்வதேசக் கமிட்டியானது அறிவை வளர்த்து சரியான மனோபாவம் ஏற்படும்படி செய்வதில் அதிகமாகச் செய்யக்கூடியதா இருக்கிறது. அதற்குப் பணம் வேண்டும். இந்தக் கமிட்டிக்கு எல்லா தேசங்களும் பணங் கொடுத்துதவும்படி சர்வதேச சங்கம் பிரயத்தனப்படவேண்டும்.

---

## தந்திச்செய்தி.

ரங்கூன் ஆகஸ்டு 31—

| | |
|---|---|
| பட்டு கெல் | 93,94 |
| ரயில் கெல் | 92,93 |
| பெரியமில்லரிஸ்ஸ்பெஷல் | 227-8, 230 |
| நசேன் சிறிய மில்லரிசி | 242-8, 245 |
| நசேன் | 252-8, 255 |
| நசேன் மில்சார் புழுங்கல் | 252-8, 260 |
| மீடான் பஜார் | 242-8, 245 |
| மீடான் எஸ். க்யூ. | 252-8, 255 |
| ரெடி புழுங்கலரிசி | 270, 280 |
| மில்சார் | 265, 275 |
| பதிலே | 272-8, 282-8 |
| பவுன் | 18-6-0 |
| தவணை வட்டி | 0—6—6 |

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டினத்திலிருந்து, சிங்கப்பூர் முதலிய இடங்களுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் பெயர் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரோஹ | 4—9—32 |
| ரஜூலா | 18—9—32 |

கப்பல்கள், சிங்கப்பூர் முதலிய இடங்களிலிருந்து நாகப்பட்டினம் வந்துசேரும் விவரம்வருமாறு:—

| கப்பல் | வந்துசேருந்தேதி. |
|---|---|
| ரஜூலா | 8—9—32 |
| ரோஹ | 22—9—32 |

மதராசிலிருந்து ரங்கூனுக்கு:—
(காலை 10 மணிக்கு)

| | |
|---|---|
| எரின் பூரா | 2—9—32 |
| எதிபோப்பியா | 9—9—32 |

## தங்கம், வெள்ளி

சென்னை ஆக 30—

| | ரூ-அ-பை |
|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 29—4—0 |
| முலாதோலா ஒன்றுக்கு | 28—14—0 |
| சவரன் மொத்தம் | 18—8—6 |
| சில்லரை | 18—9—0 |
| வெள்ளி 100 ரு எடை | 57—12—0 |
| ” 1 ரு எடை | 0—9—6 |

## ரொக்கக் கடை.

| | |
|---|---|
| இம்பீரியல் பாங்க் வட்டி (1932) ஜூலை 7 (முதல்) | 4% |
| பாங்க் ஆப் இங்கிலாந்து | 2% |
| சிங்கப்பூர் வட்டம் விற்கும் விலை வெள்ளி 100-க்கு | ரூ. 156 |
| சிங்கப்பூர் வட்டம் வாங்கும் விலை வெள்ளி 100-க்கு | ரூ. 150 |

## பிரிட்டன் செய்யும் யுத்த முஸ்திபுகள்.

சர்ச்ஹீல் பத்திரிகை பிரிட்டன் செய்யும் யுத்த முஸ்திபுகளைப்பற்றிக் கூறுகின்ற முறையில் "ஜப்பான் குவியுமீது போர்புரிய பிரிட்டிஷ் முதலாளிகள் எவ்வாறு உதவுகின்றார்களென்பதைக் கீழ்வருபவைகள் விளக்குகின்றன" வென்கின்றது.

ஒரு பர்மிங்ஹாம் தொழிற்சாலை ஜப்பானுக்காக 4 லட்சம் துப்பாக்கி குண்டு செய்கின்றது.

ஒரு ஜெர்னால்ஸோ தொழிற்சாலை பல யுத்த கப்பல்களை கட்டுகின்றது.

மலாயட் யுத்தத் தளவாட தொழிற்சாலையொன்று ஜப்பான் "ஆர்டர்" படி வேலை செய்துகொண்டிருக்கின்றது.

ஒரு காசிக் கம்பெனி நீர்மூழ்கிக் கப்பலுக்கான உள்ளமைப்பு இயந்திரங்களை செய்து குவிக்கின்றது.

# உதிர்ந்த மலர்கள்.

ஆண்டி.

எல்லோரும் தங்களைத் தவிரப் பிறரை மனிதர்களேயென்று மதிக்கின்றனர்.

—யெங்

0 0 0

அறியாமை கடவுள் சாபம்; அறிவு நாம் மேல் லோகத்துக்குப் பறந்து செல்லும் இறக்கைகள்.

—ஷேக்ஸ்பியர்.

0 0 0

புகழுக்காசவல்லாமல் கடவுளுக்காககோவில்கட்டுபவர்கள்சலவைக்கற்களில்தம் பெயர்களைப் பொறிக்கமாட்டார்கள்.

—போப்.

0 0 0

எப்போதும் உனக்கு நீயே துணையென்று இரு.

—மார்க்கஸ் ஆர்லியஸ்

0 0 0

ஒரு பெண்ணின் கல்யாண வயது 16-ம் வருடம் முதல் 24-ம் வருடம் வரையிலுமாகும். ஒரு புருஷனின் மண வயது 25 முதல் 48 வரையிலுமே.

—தயாநந்த சரஸ்வதி

0 0 0

நமது சகோதரப் பிராணிகளின் இன்னல்களைத் தீர்ப்பதற்கானவைபோக எஞ்சிய செல்வத்தை யெல்லாம் தள்ளவேண்டுவதாகும்.

—குரு நாநக்

0 0 0

பகைமை பகைமையால் தீர்க்கப்படுவதில்லை, அன்பினுலேயே தீர்க்கப்படுகின்றது.

—கௌதம புத்தர்

0 0 0

மனிதனின் அரசபோகம்அறிவென்பதிலேயே ஊடுருவிக் கிடக்கின்றது. அவ்வறிவில், அரசர்களால் வாங்கிவிட முடியாததும், அவர்களுடைய படைகளால் ஆணை செலுத்திவிடமுடியாததுமான பல பொருட்கள் குவிந்து கிடக்கின்றன.

—பேக்கன்.

0 0 0

கீழே இருப்பவனுக்கு வீழ்ச்சியைப் பற்றிய பயமில்லை. எளிய வாழ்க்கைக்குத் தற்பெருமையைப் பற்றிய கவலையில்லை.

—ஜான்பன்யன்.

0 0 0

உங்கள் மனதில் வஞ்சனை குடிகொண்டிருக்கும் போது நீங்கள் வாயை சுத்தம் செய்வதினுலும், தலை வணங்குவதினுலும், புண்ணிய தீர்த்தங்களில் மூழ்குவதினுலும், தீர்த்த யாத்திரை போவதினுலும் என்ன பிரயோசன மேற்படப் போகின்றது?

—கபீர்

0 0 0

குழந்தைகள் கடவுளின் உலக தூதர்களாவர். ஆக்கியோனும் ஆக்கப்பட்டோனும் இரு கடைசிகளில் நின்று கொண்டிருக்கப் பரிசுத்தத்திற்கும் களங்கமின்மைக்கு முறைவிடமாயிருக்கும் குழந்தைகள் இருவருக்குமிடையே,நிற்கின்றார்கள். அவர்கள் நம்பிக்கையின் அழியாத ஊற்றும் நிரந்தர இன்பத்தின் விளை நிலமுமாவர். அவர்கள் ஜீவிதவொளியையும், ஆரோக்கியத்தையும், புதிய பரிசுத்தமான உணர்ச்சிகளையும் வெளியிடுகின்றார்கள். அவர்களே மனிதனின் நற்செய்கையும், உண்மையும், அழகும், வேதமும், பிரபந்தமும் வேதாந்தமும், மதமும் எல்லாவற்றினும் மேலாக ஆன்மாவும் ஆவர். அவர்களின்றேல் இவ்வுலகு இருண்டும் உயிரற்றும் வறியதாகவும் தோற்றும். புஷ்பங்கட்கடுத்த படியாகக் கடவுள் படைப்பில் வியக்கத் தகுந்தவர் அவர்களே.

— ஒரு பேராசிரியர்

## இராஜப்பிரதிநிதி சாப்ரு சம்பாஷணை.

டோராடூனிலிருந்து வந்த செய்தி ஒன்றினுல் டாக்டர் சாப்ரு இராஜப்பிரதிநிதியுடன் 30௳ ஒரு மணிநேரம் பேசிக்கொண்டிருந்தார் என்று தெரிகிறது. டாக்டர் சாப்ருவை பின்னர் பத்திரிகை நிருபர் ஒருவர் பேட்டிகண்டபோது அவர் ஒன்றும் சொல்ல முடியாது எனக் கூறிவிட்டார். கவர்ன்மெண்டும் பிரதிவாதிகளும் சர்வகட்சி மகாநாட்டு மூறை சம்பந்தமாக ஒருவித சமரஸமுடிவுக்கு வரும்விஷயமாகவே சம்பாஷணை நடந்ததாகத் தெரிகிறது.

## பலவந்த புணர்ச்சி வழக்கு.

எதிரிகளுக்கு ரூ. 100 அபராதம்.

மதுரை, ஆகஸ்டு 23

சிவகெங்கையைச் சேர்ந்த இலுப்பைக் குடியில் வசிக்கும், 15, 16, வயதுடைய நாச்சம்மை, பாக்கியம் ஆகியவர்கள் மற்றவர்களோடு கழனியில் வேலைசெய்து விட்டு உப்பாற்றில் ஸ்நானம் செய்து திரும்புகையில், சுப்பய்யா, தாத்தன், கருப்பையா, குண்டு மலை ஆகியவர்கள் மேல்கண்ட இருபெண்களையும் பலவந்தமாக இழுத்துச் சென்று அங்குள்ள ஓர் புதருக்கு சமீபத்தில் கற்பழித்ததாக சிவகெங்கை போலீஸாரால் தொடரப்பட்டிருந்த வழக்கை இராமநாதபுரம் அடிஷனல் செஷன்ஸ் ஜட்ஜு விசாரணைசெய்து எதிரிகள் குற்றவாளிகளெனத்தீர்மானித்து தலைக்கு 100 ரூபாய் அபராதம் விதித்தார் என்று தெரிகிறது.

## குரங்கின் தற்கொலை

சுருக்கிட்டுக் கோண்டு சாதல்

"டைம்ஸ்" பத்திரிகை நிருபர் ஓர் ஆச்சரியகரமான சம்பவத்தை எழுதியுள்ளார். ஆப்டன் என்ற உயிர்ப் பிராணிச்சாலையில் ஓர் குரங்கு தன்னைத்தானே தூக்குப் போட்டுக் கொண்டு இறந்ததாம். பிராணிச்சாலை காவலாளி கூறிய விவரமாவது:—

"எனது ஆயுட் காலத்தில் ஓர் பிராணி தன்னைத்தானே தூக்கிட்டுக் கொண்ட விந்தையைக் கண்டதேயில்லை, இந்தச் சாலையின் வெளியிடத்தில் அமைக்கப்பட்டுள்ள கூண்டில் இருந்த குரங்கு ஒன்று ஆறடி நீளமுள்ள கயிற்றைப் பல்லினுல் கடித்து அறுத்தது. வேடிக்கை பார்த்தோர் அனைவரும் இது கண்டு களிப்புற்றனர்.

பிறகு கயிற்றை எடுத்துக்கொண்டு மத்தியிலுள்ள மரத்தின் மேல் ஏறி கிளையில் கயிற்றின் ஓர் நுனியைக் கட்டியது. மற்றொரு நுனியில் சுருக்குப் போட்டு தன் கழுத்தில் மாட்டிக் கொண்டது. பின் மேற் கிளையில் தாவி தொப்பென வீழ்ந்தது. உடனே பிராணன் போய்விட்டது. இது கண்டு அனைவரும் திகைத்தனர். கேவலம் ஓர் குரங்கு இம் மாதிரி செய்து கொள்ளுமென கடைசிவரை எவரும் நினைத்ததில்லை. ஒரு கால் அதன் குடும்பத்திற்குள் அதற்கும் கவலை ஏற்பட்டிருக்குமோ என்னமோ தெரியவில்லை, ஆனுல் கூண்டில் வசிக்கும் இதரக் குரங்குகளை நாங்கள் வேறொரு இடத்திற்குக் கொண்டு போய் ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருகிறோம். ஏனெனில் அந்தக் குரங்குகளும் அதுவும் ஒரு விளையாட்டெனக் கருதி அங்ஙனமே செய்து கொண்டால் என் செய்வது?"

## "ரோஹ" கப்பலில் பயித்தியம்.

பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் "ரோஹ" என்னும் கப்பல், மலேயாவிலிருந்து, தபால்களுடனும், சரக்குகளுடனும் 4,000 பிரயாணிகளுடனும் ஆக25௳ நாகப்பட்டணம்வந்து சேர்ந்தது. அக்கப்பல் மறுநாள் நாகையை விட்டுப் புறப்பட்டுச் சென்னைக்குப் பிரயாணஞ் செய்தது. இந்த இறக்கிய பிரயாணிகளுள் மலேயாவிலிருந்து தாய்நாட்டுக்குத் திரும்பிவந்த பல தொழிலாளர்கள் சேர்ந்திருந்தனர். தாய் நாட்டுக்குத் திரும்பிவந்தவர்களில் இருவர்களுக்குக் கப்பல் பிரயாணத்தில் பைத்தியம் பிடித்துவிட்டதாகத் தெரிகிறது.

## 412 அடிக்குக் கீழிருந்து ஊற்று.

தென்னுற்காடு ஜில்லா விருத்தாசலம் தாலூகா உய்யக்கொண்டான் கிராமத்தில் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி பிள்ளை நன்செய் புன்செய்நிலங்கள் சாகுபடி செய்வதற்காக சென்னை கைத்தொழில் இலாக்கா அதிகாரிகளின் உதவியால் போட்ட 6 அங்குல போரிங்கில், சுமார் 412 அடி பூமிக்குக் கீழிருந்து பூமிகதமேல் ஒன்பதரை அடி உயரம் வரை தண்ணீர் கிளம்பி ஜலம் வேகமாக விழுகிறது. மேற்படி ஜலம் சுமார் 300 காணி சாகுபடி செய்யலாம் என்று சொல்லப்படுகிறது. இந்த குழாய்வைக்க டிபார்டமெண்டார் உதவி செய்தது மெச்சப்படுகிறது. இதற்கு சுமார் ரூ 2000 வரையில் செலவாயிற்று.

# ரயில்வண்டிப் போக்குவரவு.

(செப்டம்பர் 1-ந் தேதி முதல்)

## திருச்சி—மாநமதுரை.

| | | 25 நிர் பாசஞ் | 1 நிர் மெயில் | 27நிர் பாசஞ் | 29நிர் பாசஞ் | 33நிர் மிக்சட் | 31நிர் பாசஞ் | தனுஷ் எக்ஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி ஜங் | புறப் | 3-50 | 7-40 | 10-45 | 13-20 | ........ | 17-20 | 21-55 |
| காரைக்குடி | வரும் | 6-24 | 10-10 | 13-31 | 16-13 | ........ | 20-25 | 0-27 |
| காரைக்குடி | புறப் | 6-30 | 10-20 | ........ | 16-35 | 17-35 | ........ | 0-33 |
| மாநமது | வரும் | 8-18 | 12-6 | ........ | 18-30 | 20-15 | ........ | 2-15 |
| மாநமது | புறப் | 9-30 | 12-26 | ........ | 18-40 | ........ | ........ | 2-29 |

நிர். 31 வண்டி நேராக லால்குடியிலிருந்து வருகிறது.
நிர். 29 ,, வண்டிநேராக மதுரைக்குப் போகிறது:
நிர். 25 வண்டி தனுஷ்கோடிக்கு நேராய்ப் போகிறது.

## மாநமதுரை—திருச்சி.

| | | 32 நிர் பாசஞ் | 30 நிர் மிக்ஸட் | 34 நிர் பாசஞ் | 2 நிர் மெயில் | 26 நிர் பாசஞ் | தனுஷ் எக் |
|---|---|---|---|---|---|---|---|
| மாநமதுரை | புறப் | .... | 5-55 | 9-35 | 14-46 | 18-6 | 22-40 |
| காரைக்குடி | வரும் | .... | 8-39 | 11-31 | 16-28 | 19-54 | 0-25 |
| காரைக்குடி | புறப் | 6-45 | 8-53 | 11-40 | 16-34 | 20-0 | 0-36 |
| புதுக்கோட்டை | வரும் | 7-49 | 10-5 | 12-52 | 17-36 | 21-1 | 1-37 |
| திருச்சி (ஜங்) | வரும் | 9-38 | 12-5 | 14-40 | 19-0 | 22-37 | 3-10 |

நிர். 32 வண்டி லால்குடிக்கு நேராகப் போகிறது.
நிர். 30 வண்டி காரைக்குடிக்கும் திருச்சி ஜங்ஷனுக்கு மிடையில் பாசஞ்சர் போல ஓடும்.
நிர். 34 வண்டி மதுரையிலிருந்து லால்குடிக்கு நேராகப்போவது.
நிர். 26 வண்டி தனுஷ்கோடி முதல் திருச்சி வரையிலும் நேராகப் போகும்.

## புதுக்கோட்டை புதிய போலீஸ் கமிஷனர்.

தற்காலம் சென்னையில் உதவி போலீஸ் கமிஷனராக இருக்கும் மிஸ்டர் ஏ. ஆர். ஜேக்மன் என்பவரை சமஸ்தானத்திற்கு உதவுவதாக சென்னை கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டு விட்டபடியால் மேற்படியாரை சமஸ்தான போலீஸ் கமிஷனராக புதுக்கோட்டை தர்பார் நியமனம் செய்திருக்கிறார்கள். இப்போதிய ஏற்பாட்டின்படி இரண்டு வருஷம் மேற்படியார் உத்யோகம்வகிப்பாரென்று தெரிகிறது. செப்டம்பர் மாதம் 10ந்தேதி வாக்கில் தன் உத்யோகத்தை ஒப்புக்கொள்வார் எனவும் தெரிகிறது.

இப்போதிருக்கும் கமிஷனர் மிஸ்டர் ஹயூம் நெல்லூர் ஜில்லாவுக்கு ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டாக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

## கல்வியில் பட்டம் பெற்ற குருட்டுப் பெண்.

அமெரிக்கப் பெண் ஒருவருக்கு இங்கிலாந்தில் கிளாஸ்கோ சர்வகலாசாலையார் எல்லெல் டி பட்டத்தை கொடுத்திருக்கின்றனர். இந்தப் பெண் குருடாயிருந்தாலும் ஸ்பரிசிக்கும் தன்மையினுலேயே பார்க்கின்றனராம். செவிடாயிருந்த போதிலும் கேட்டுத்தெரிந்து கொள்ளுகின்றனர்.

இவருடைய பெயர் மிஸ் ஹெலன் கெல்லர். கண்பார்வையையும் கேட்கும் தன்மையையும் பிறந்த 19 மாதங்களுக்குள் இழந்துவிட்டனராம். இப்போது இவருக்கு வயது 52 இவர் பெரிய பணக்காருடைய புதல்வியாவர்,

மிஸ் ஹெலன் தன்னுடைய காரியதரிசி மிஸ் மேரி தாம்சன் மூலமாக வருபவர்களிடம்பேசுகின்றார். ஸ்ரீமதி மேரி ஊமை செவிடர்கள் எழுத்துக்கள் மூலமாக மிஸ் ஹெலன் கையில் சம்பாஷணைகளைத் தெரிவிக்கின்றார்.

மிஸ் மேரியின் வாயில் கையை வைத்துக்கொண்டே பேசுபவர்கள் கூறுவதை மிஸ் மேரிவாய் மூலமாகவே அறிந்துகொள்ளுகின்றார்.

எடின்பரோ நகரத்திற்கு இரண்டு வருடங்களுக்கு முன் வந்தார். அந்த நகரத்தில் பிரின்ஸெஸ் தெருவில் போகும்போது ஒரு புறம் அழகிய கடைகளும மற்றொரு புறம் அழகிய பூந்தோட்டமும் இருக்கின்றது என்று இவர் கூறியது சரியாகவே இருந்தது. எடின்பரோ மாளிகையில் உள்ள ஸ்காட்லண்ட் தேசிய புத்த ஞாபக சின்னத்தைப் பற்றிய நுணுக்கமான விஷயங்கள் பலவற்றையும் இவர் கூறினாம்!

இயற்கையில் இவர் மிகவும் கஷ்டமான நிலைமையில் இருந்தபோதிலும் ஊக்கமான மனத்தினுல் தான் உலகப்பிரசித்தி யடைந்தார்.

பல வஸ்துக்களைத் தடவிப் பார்ப்பதினுல் அவற்றைப் பற்றி அறிந்து ஆனந்தமடைகின்றார். சங்கீதக்கச்சேரி நடக்கும் போது சங்கீதக்கருவிகள் மேல் கையை வைத்துக்கொண்டே கைமூலமாகக் கேட்டு ஆனந்தப்படுகின்றார்.







## தேவகோட்டை புதிய பாலம்.

முதல் மந்திரி திறந்துவைப்பார்.

மதுரை ஆக 21

நேற்று இராமநாதபுரம் ஜில்லாபோர்டு கூட்டமொன்று இராமநாதபுரம் இராஜாவின் தலைமையின் கீழ் கூடியது. போர்டு அங்கத்தினராக தேர்ந்தெடுக்கப் பட்ட சேத்தூர் ஜமீந்தார் ராஜவிசுவாசப் பிரமாணம் செய்தார். தேவகோட்டையில் ஜில்லா போர்டால் புதிதாகக் கட்டப்பட்ட பாலத்தை திறந்து வைக்க முதல்மந்திரி திவான் பஹதூர் பி. முனிசாமி நாயுடுவை அழைக்க வேண்டுமென்று தலைவர் பிரேரேபித்ததைப் போர்டார் ஒத்துக் கொண்டனர். திரு. ஏ. உக்கிரபாண்டியன் பிள்ளை பிரேரேபித்தபடி அந்தப் பாலத்தை இராமநாதபுரம் இராஜாவின் பெயரால் அழைக்கப்பட வேண்டுமென்று போர்டார் ஏகமனதாய்த் தீர்மானித்தனர் ஆகையால் அப்பாலம் "ஷண்முக ராஜேஸ்வர சேதுபதி பாலம்" என்று அழைக்கப் படும். (திராவிடன்)

## பெஞ்சு மாஜிஸ் திரேட்டுகள்.

திருவாளர்களான், C. A. C. A. காசிநாதன் செட்டியார், O. A. K. R. அருணாசலம் செட்டியார், P. A. L. அருணாசலம் செட்டியார் ஆகியோர் பள்ளத்தூர் பெஞ்சுமாஜிஸ்ட்ரேட்கோர்ட்டில்மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருகின்றார் என்று 23-8-32-ந் தேதி கஜட்டினுல் தெரிகிறது.

## ஆதிதிராவிடா கள்ளர் தகராறு.

தேவகோட்டையின் சுற்றுப் புறங்களில் ஏற்பட்டிருந்த ஆதிதிராவிடர்—கள்ளர் தகராறைப் பற்றி விசாரணை செய்வதற்காக திருவாளர்கள், தேவதாஸன் B. A. B. L. டானியல் தாமஸ் B. A. B. L ராவ்சாகிப் முனிசாமிப் பிள்ளை ஆகியவர்கள் விஜயம் செய்து தகராறு நடந்தவிடங்களில் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## பள்ளத்தூர் ஓர் பரிதாப மரணம்.

(நமது நிருபர்)

இவ்வூருக்கு சமீபத்திலுள்ள கொத்தடி என்றவிடத்தில் சோலையன் என்ற நாட்டார் வீட்டு பையன் 27-ந் தேதி காலை தன்னுடைய ஆடுகளுக்கு வாகை மரததிலேறி குழை ஒடிக்கச் சென்றதாகவும் அவ்வமயம் கால் தவறி மரத்திலிருந்து விழுந்து விட்டதாகவும் காயங்கள் அதிகமானதினுல் இவ்வூர் அ. மு. இலவச வைத்தியசாலையில் கொண்டுபோய் விடப்பட்டதாகவும் அடுத்த நாள் சாயந்தரம் இறந்து போனதாகவும்தெரிகிறது.

## மேலைச் சிவபுரி.

இவ்வூர் மீனுக்ஷிசுந்தரேஸ்வரான் தேவஸ்தானத்தில், ஆவணிமூல உற்சவத்திற்கு நாளது மீ 18 ௳ காப்புக்கட்டி 25 ௳ மாலை பிட்டுக்கு மண்சுமத்தலும், 26 ௳ திருக்கல்யாணமும் 27௳ சத்தாவர்ணமும், நடைபெறும். ஷெ உற்சவத்தை முன்னிட்டு. எட்டாந்திருவுலா வன்று இவ்வூர் சித்திவிநாயகர் கலாசாலை மாணவ மாணவிகள் திருவாதவூரரென்னும் மாணிக்கவாசகரின் திவ்விய சரித்திரத்தை நாடகரூபமாக நடத்திக்காண்பிப்பார்கள்என்று ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

## டிவாலராவின் அதிர்ஷ்டம்.

பிரைட்டன் என்ற இடத்தில் மிஸ். மேரி பிட்ஸ்-பாட்ரிக் என்ற கிழவி இறந்து போனுள். அவளுக்கு 5000 பவுன்களுள்ள சொத்துக்கள் உண்டு. அனைத்தையும் டிவாலராவுக்குச் சேரவேண்டுமென மரணப் பத்திரம் எழுதி வைத்திருக்கின்றாள். இதற்கு முன் கார்டினல் போர்ன் என்பவருக்கும் அவருக்குப் பின் வருபவருக்கும் எழுதி வைத்திருந்தாளாம். அவைகள் காணப்படவில்லை. மிஸ்டர் ஜான் பிட்ஸ் பாட்ரிக் என்ற மாஜி-ரயில்வே செக்கர் ஒருவன் சொத்து தனக்குச் சேரவேண்டிய தென்கிறுனும்.

## "இந்தியர் பர்மாவை சுரண்டுகின்றனர்."

பிரிவினைக் கட்சித் தலைவரின் பேச்சு.

இரங்கோன் சர்வகலாசாலை மாணவர் கழக மண்டபத்தில் 20௳ பொதுக்கூட்டமொன்று நடைபெற்றபோது பர்மா தேசிய—சமுதாய—குடியாட்சிக் கட்சியென்ற பிரிவினை வேண்டுங் கட்சியின் தலைவரான ஊட்டுன் ஆங் ஜோ பர்மிய பாஷையில் பேசியதன் சாரம் வருமாறு:—

பர்மாவின் பொருளாதார நிலை மிகவும் வேலைக்கிடமானதாகும். இந்நாட்டில் பர்மிய மக்களே பயிர்த்தொழில் செய்வோராவர்; அதாவது உற்பத்தி செய்கின்றனர். என்றாலும் அவர்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களை இந்திய வியாபாரிகளிடமிருந்தும் சீன வியாபாரிகளிடமிருந்தும் வாங்கவேண்டியோராகின்றனர். பர்மியர்கள் இதரரிடமிருந்து கடன் வாங்கித் தொழில் செய்யவேண்டியதாகிறது. ஏராளமான பணம் இங்கிருந்து இந்தியாவிற்குச் சென்றுகொண்டிருக்கின்றது. ஒதுக்கிவைக்கப்பெற்றுள்ள இலாக்காக்கள் மக்களின் ஆதீனத்தில் வந்துவிட்டால், பர்மாவில் ஏராளமாகப் பணமிருக்கும். அதன் பின் பணம் வெளியூர்களுக்குச் செல்லாது. நீங்கள் அனுதினமும் தபால் ஆபீசுகளுக்குச் சென்று பார்த்தால் அனுதினமும் இந்திய வியாபாரிகளும் தொழிலாளர்களும் இதரர்களும் எவ்வளவு பணங்களை இந்தியாவிற்கு அனுப்பிவைக்கின்றனரென்பதை நீங்கள் நன்கு அறிந்து கொள்ளலாம். இங்ஙனம் லட்சக்கணக்கான ரூபாய்கள் பர்மாவிலிருந்து சென்று கொண்டேயிருக்கின்றன, இந்தியாவிற்கு நாம் ஏழுலட்சம் ரூபாய் மதிப்புள்ள சரக்குகளை ஏற்றுமதி செய்கிறோம். ஆனுல் அதற்கு அதிகமாக இந்தியாவிலிருந்து நாம் சாமான் இறக்குமதி செய்கின்றோம். பிரிவினை ஆகிவிட்டால், நாம் சுங்கவரி போட்டு, கமது நாட்டிலிருந்து இந்தியாவிற்குக் கொண்டுபோகப்படும் பணத்திற்கு ஏற்ற விதத்தில் சரிப்படுத்திக்கொள்ளலாம்,பொருளாதாரவிஷயத்தைநன்குஅறிந்தவன் நான் ஒருவனே என பர்மாவில் சிலர் கூறிவருவது கண்டு நான் ஆச்சரியமடைகிறேன்.

## பர்மாப் பிரிவினைச் சங்கம்.

அகில பர்மா பிரிவினை எதிர்ப்புச் சங்கத்தின் கூட்டமொன்று ஆகஸ்ட் 22-ந் தேதியன்று ரங்கூன் கார்ப்பொரேஷன் தலைவரான பாரிஸ்டர் யு. பாடுன் வீட்டில் கூடியது. அதில் வரப்போகும தேர்தலுக்கு 70 அபேக்ஷகர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இந்தியாவி லிருந்து பர்மாவைப் பிரிக்கவேண்டுமென்ற ஜனக் கக்ஷியினர் பெரும் பான்மையான பதவிகளுக்கு அபேக்ஷகர்களைத் தெரிந்தெடுத்து விட்டனர். யு. பாபீயும் வேறு சில ஜனக்கட்சி மெம்பர்களும் தேசமெங்கும் தீவிரமாக ராஜீயப்பிரசாரம் செய்துவருகின்றனர்.

## சீனுவில் கட்டாய ராணுவப்பயிற்சி.

பிரான்ஸு இதாலி முதலிய தேசங்களுக்கு நிரந்தர ராணுவப்படை களிருப்பது போல் சீனுவுக்கும் ஒரு ராணுவமிருக்க வேண்டுமென்று சீன யுவர்களுக்கு சிறிது காலம் கட்டாயமாக ராணுவபபயிற்சி யளிக்கப்படுவதற்காக ஒரு சட்டமியற்ற சீனு யோசித்துக் கொண்டிருக்கிறது. நிரந்தர ராணுவப்படை மூன்று பாகங்களாகப் பிரிக்கப்படும். முதல் பாகம் ராணுவ வேலையைச் செய்து கொண்டிருக்கும். இரண்டாவது பாகம் தேவையானபோது உபயோகிக்கப்படும். மூன்ருவது பாகம் மூலபலம்போலிருக்கும். சட்டம் நிறைவேறிய தினமே இது அமலுக்கு வரும் என்று சட்ட நகல் கூறுகிறது.

## மோட்டார் வரிச் சட்ட ரத்துமசோதா?

சென்னை சட்டசபை அங்கத்தினர் திரு. எஸ். வெங்கடாசலம் செட்டியார், சென்னை மோட்டார் வண்டிகள் வரிச் சட்டத்தை ரத்து செய்வதற்கு சட்டசபையில் ஒரு மசோதா பிரேரேபிக்க அனுமதித்தர வேண்டுமென்று கவர்னரைக் கேட்டிருக்கிறார்.

## ஆங்கிலோ—ஐரிஷ் தகராறு.

ஜார்ஜ் பர்னுர்டு ஷா அபிப்பிராயம்.

திரு. ஜார்ஜ் பெர்னுர்ட் ஷா ஆங்கிலோ—ஐரிஷ் தகராறு பற்றி "மாஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகையின் பிரதிநிதிக்கு பேட்டியளித்து கூறியது வருமாறு:—

தான் சம்பந்தப்பட்டுள்ள ஒவ்வொரு விஷயத்திலும் தானே ஜட்ஜியாகவும் ஜூரியாகவும் தூக்குப் போடுபவனுகவும் விளங்குவது கூடாதென எவரேனும் கூறின், அதை இங்கிலாந்து என்றும் அறிந்து கொள்வதில்லை. இந்த அருவருக்கத்தக்க கர்வத்தாலும் மமதையினுலுமே, மிஸ்டர் டிவாலராவின் நிலக்கப்பப் பிரச்னைபற்றிப் பெரிய பேதைத்தனமாக இங்கிலாந்து நடந்துகொண்டிருக்கிறது.

ஆங்கிலோ—ஐரிஷ் ஒப்பந்தத்தை புனராலோசனை புரிவதற்கு நியாய முறையில் பிரீ ஸ்டேட் கோருவதற்கு உரிமை இருக்கத்தான் செய்கிறது. பஞ்சாயத்தார் மூன் தீர்த்துக்கொள்ளலாமென அயர்லாந்து கோரியதை பிரிட்டிஷ் சர்க்கார் தனது முட்டாள் தனத்தினுல் அங்கீகரிக்கவில்லை. எட்டுணையேனும் விவேகமிருப்பின், அயர்லாந்தின் நியாயமான உரிமைக்கு பிரிட்டிஷ் சர்க்கார் இணங்கியே யிருப்பர்; பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திற்குக் கட்டுப்படாத பாரபட்சமற்ற அன்னியர்களை பஞ்சாயத்தார்களாக ஏற்படுத்தி சாதகமான முடிவு காண வற்புறுத்தியிருப்பர். ஆனுல் அவ்விதம் ஆவதற்கில்லை.

ஏகாதிபத்யத்திற்கு கட்டுப்பட்டுள்ளவர்களை பொறுக்கி யெடுத்துக்கொள்ள மிஸ்டர் டிவாலரா அனுமதிக்கப் பெற்றிருந்தால், அவர் மகாத்மா காந்தியையும் ஸ்ரீமதி சரோஜனி நாயுடுவையும் நியமித்திருப்பர் என்பது நிச்சயம்.

ஏகாதிபத்யத்திலுள்ள ஒவ்வொரு மாகாணத்திலும் பிரிட்டிஷாருக்கு விரோதமான கட்சிகள் தீர்க்கமுடன் விளங்குகின்றன வென்பது வெளிப்படை.

## காந்திஜி சிறை வாழ்க்கை.

திரும்ப வெள்ளாட்டுப் பால் சாப்பிடுகிறார்.

சிறைச்சாலை சூப்பரின்டெண்ட் யோசனை கூறியதின் பேரில் மகாத்மா காந்தி மீண்டும் வெள்ளாட்டுப் பால் சாப்பிட ஆரம்பித்து விட்டார் என்று தெரிகிறது. அவர் கொஞ்சக்காலமாக வெள்ளாட்டுப் பால் சாப்பிடுவதை நிறுத்திவிட்டார். பால் சாப்பிடுவதை நிறுத்தும்போது உப்புச் சேர்ப்பதையும் நிறுத்திவிட்டார். அவர் தண்ணீரில் ஊறவைத்த ரொட்டியும் பேரீச்சம் பழமும் வாதங் கொட்டையும் சாப்பிட்டு வந்தார். இவ்விதம் சாப்பிட ஆரம்பித்தது முதல் அவர் மெதுவாக நிறையில் குறைந்து விட்டார். ஒரு மாதம் கழித்ததும் 94-லிருந்து 82-பவுண்டெடையானுர். இப்பொழுது அவர் எடையில் அதிகமாயிருக்கிறார்.

காந்திஜி தனது நேரத்தில் பெரும் பாகத்தை வாசிப்பதிலும் தையல் மிஷின் போல் செய்யப்பட்டிருக்கும் புதிய சர்க்காவில் நூல் நூற்பதிலும் கழிப்பதாயும் செய்தி கிடைத்திருக்கிறது. காந்திஜிக்கு கடிதங்கள் வருவது குறையவில்லை. அமெரிக்காவிலிருந்து மிக விநோதமான கேள்விகள் எல்லாம் கேட்டு அவருக்குக் கடிதங்கள் வந்து குவிகின்றன. அவர் சந்தோஷமாகவே வெகு தொலையிலிருக்கும் இந்நண்பர்களுக்கு எல்லாம் பதில் எழுதி வருகிறார்.

## ஸ்ரீமதி ருக்மணி லக்ஷமீபதி விடுதலை.

வேலூர் பெண்கள் சிறைச்சாலையில் முதல் வகுப்பிலிருந்த சென்னை ஸ்ரீமதி ருக்மணி லக்ஷமீபதி அம்மாள் தண்டனை காலம் முடிந்து 25-ந் தேதி யன்று காலை விடுதலை அடைந்து சென்னைக்குப் பிரயாணமானுர்கள். சி. வகுப்பில் கொடைக்கானல் ரோட் ஸ்ரீமதி ரத்தினம்மாள் மதுரை திரு. முத்தம்மாள் ஆகிய இருவரும் 24-ந் தேதியன்று விடுதலை அடைந்து தாங்கள் தங்கள் ஊருக்குச் சென்றார்கள்.

## செட்டியார்பேரில் அரஸ்ட் வாரண்டு.

பினங்கிலும் சோலப்பிறையிலும் லேவா தேவி செய்து வரும் பிரபலஸ்தராகியதிரு வாளர் என். என். ஏ. எஸ். சொக்கலிங்கம் செட்டியார் என்பவர் மீது, அவரிடம் காரியஸ்தராயிருந்த திரு. ஏ. எல். என். அழகப்ப பிள்ளை மான நஷ்டத்திற்காக தாவா செய்து எடுக்கப்பட்ட அரஸ்ட் வாரண்டுப்படி திரு. செட்டியாரை கைது செய்து 10—8—32-ல் பினங்கு போலீஸ் கோர்ட்டு நீதவான் முன்பு ஆஜராக்கினார்கள்.

கடந்தபிப்ரவரி ௴ 2ந்தேதி இப்போதைய வாதியாகிய திரு. ஏ. எல். என். அழகப்ப பிள்ளை பேரில் நம்பிக்கைத் துரோக மெனும் பொய்யான முகாந்திரங்கள் காட்டி சோலப்பிறை போலீஸ் கோர்ட்டாரால் கைதியாக்கச் செய்து அவரை எதிரி திரு. எஸ். என். ஏ. எஸ். சொக்கலிங்கம் செட்டியார் வேணுமென்றே அவமானப் படுத்தியிருப்பதற்காக எதிரி பேரில் வாதி தொடர்ந்து வாரண்டெடுத்து கைதி செய்திருப்பதாய் தெரிகிறது.

வாதிக்காக லாயர் திரு. வி. டி. டி. ஹோகனும் எதிரிக்காக திரு. எப். ஜி. பூலியும் ஆஜராகி வாதித்தனர். வாதி லாயர் இந்த வழக்கைக் கோலப்பிறை கோர்ட்டுக்கு மாற்ற வேண்டுமென்றும் எதிரி லாயர் கூடாதென்றும் பினங்கு கோர்ட்டிலேயே விசாரிக்க வேண்டுமென்றும் வாதித்தனர். இரு தரப்பு வாதத்தையும் கேட்ட நீதவான் வழக்கை கோலப்பிறை கோர்ட்டுக்கே மாற்றி எதிரியை $500 ஜாமீனில் விடும்படியும் உத்திரவிட்டார். விசாரணை வாய்தா இன்னும் தெரியவில்லை முன்னேற்றம்.

---

## சபாரத்தினம் செட்டியார் ஹால்.

### ஆரம்ப வைபவம்.

ஆக 26௳ மாலைதிருச்சிவிடி' கிளப்பில் சுமார் ரூ. 2000 செலவில் கட்டப்பட்ட "சபாரத்தினம் செட்டியார் ஹாலை" ஜில்லா கலெக்டர் திறந்துவைத்தார். பல பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர். இந்த ஹாலின் கட்டிடச் செலவை காணுகொத்தான் வாசியும், ஸ்ரீரங்கம் நகரசபை மெம்பருமாகிய ராவ்பகதூர் ஸ்ரீ. எஸ். ஆர். எம். எம். வி. டி. சபாரத்னம் செட்டியார் ஏகதேசமாக ஒப்புக்கொண்டிருக்கிறார். இதைப்பற்றிய முன்னுரையை கிளப் காரியதரிசி ஸ்ரீ. டி. ஆர் கோபால்ராவ் படித்தார். பின்னர் ஜில்லா கலெக்டர் ஸ்ரீ. எஸ். ரங்கனாதன், ஹாலைத் திறந்து வைத்து இந்தப் பணநெருக்கடியான இக்காலத்தில் இப்பெருந் தொகையைக் கொடுத்து உதவிய ஸ்ரீ. சபாரத்தினம் செட்டியாரைப் பெரிதும் பாராட்டிப் பேசினார்.

பிறகு சிற்றுண்டி விருந்தொன்று நடத்திவைக்கப் பட்டது. அதில் பல நண்பர்கள் கலந்துகொண்டனர்.

---

## ரோனு ரஜூலா மாற்றப்படும்

சிங்கப்பூர் ஆக 18.

இப்போது தென் இந்தியா துறைமுகங்களுக்கு ஓடிக் கொண்டிருக்கும் ரோனு ரஜூலா என்ற இரு கப்பல்களுக்கும் தற்போது போதுமான சரக்குகளும், பிரயாணிகளும்கிடையாததால்வேறு சிறிய கப்பல்களை இந்த பாதையில் விடுவதற்கு யோசித்து வருவதாய்த் தெரிகிறது

---

## மதுரை ஜில்லா போர்டு

### திரு போக்ஸ் தலைவரானார்.

ஆகஸ்டு 27ந்தேதி மாலை மதுரை ஜில்லாப் போர்டின் தலைவர் தேர்தல் நடைபெற்றது. ஜில்லா கலக்டர் திரு. ஜே. எப். ஹால் C. I. E. தலைமை வகித்தார். ராஜவிஸ்வாசப் பிரமாணம் செய்து அங்கத்தினரமர்ந்த பிறகு தலைவர் பதவிக்கு சேத்தூர் ஜமீந்தாரும் திரு. போக்ஸும் பிரேரேபிக்கப் பட்டனர். ஓட்டுக்கு விட்டதில் திரு. போக்ஸுக்கு 25 ஓட்டுகளும் ஜமீந்தாருக்கு 24 ஓட்டுகளும் கிடைத்ததால்தலைவர் திரு.போக்ஸு வெற்றிபெற்றதாக அறிவித்தார்.

---

## பத்திரிகைகளுக்கு புதிய கஷ்டம்.

### தந்திக் கட்டணம் உயர்வு?

இந்திய தந்தி தபால் இலாகாவிலேற்படும் அதிகச் செலவை சரிக்கட்டும் நிமித்தம், பத்திரிகைகளுக்கு அனுப்பும் தந்திகளின் கட்டண விகிதத்தை உயர்த்த யோசனை நடைபெற்று வருவதாகத் தெரிகிறது. சர் கொவாஸ்ஜி ஜிகாங்கீர் தலைமை வகித்த போஸ்டல் அக்கவுண்ட்ஸ் கமிட்டி முன்பாக ஏற்கனவே இவ்விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டது. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி முன்பாக தந்தி இலாகா டைரக்டர் ஸ்ரீ சையாம் கூறிய சாட்சியத்தில், தந்திச் செய்திகளின் கட்டண விகிதத்தை உயர்த்தினால் அதிகச் செலவை சுலபமாக சமாளிக்கலா மென்றும், தந்தி இலாகாவை வர்த்தக முறையிலேயே லாபகரமாக நடத்த வேண்டியது அவசியமாகு மென்றும், சாதாரண தந்திக் கட்டண விகிதத்திற்கும், பத்திரிகைகள் தந்தி விகிதத்திற்குமுள்ள வித்தியாசத்தை, சர்க்கார் ஜெனரல் இலாகா வருமானத்திலிருந்து தந்தி இலாகாவுக்கு அளித்து ஈடுசெய்ய வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

இவ்விதச் செய்திகளைக் கேட்டு, கல்கத்தா பத்திரிகாசிரியர்களிடையே பெரும் பரபரப்பு ஏற்பட்டுள்ளது. பத்திரிகைகளுக்கு ஏற்பட்டுள்ள இப்புதிய ஆபத்தை நீக்க கட்டுப்பாடான முறையில் கிளர்ச்சி செய்வது பற்றி அவர்கள் யோசித்து வருகின்றனர்.

---

### உலகில் பெரிய தூரதர்சினி.

தற்போது கட்டப்பட்டுக் கொண்டிருக்கும் உலகில் பெரிய தூரதர்சினி (Telescope) கண்ணாடியைப் பற்றி மிஸ்டர் வெய்ட்சான்ஸ் லண்டன் டெய்லி மெயிலில் எழுதும் போது குறிப்பிடுவதாவது:—

உலகில் இப்போது காணப்படுகின்ற தூரதர்சினிகளில் மிகப் பெரியது காலிபோர்னியாவிலுள்ள பாஸ் டெனு வில் மௌண்டு வில்சனிருப்பதாகும். அது 1921-ம் வருடம் கட்டி முடிந்தது. அதில் 100-அங்குலக் கண்ணாடி இணைக்கப்பட்டிருக்கிறது. அதன்கனம் 13-அங்குலமாகும். மனிதர் கண்களுக்குப் புலப்படுவது போல் 2 லட்சம் பங்கு அதிகமான வெளிச்சம் அதில் தெரியும். அதன் வழியாகப் புகைப்பட மெடுத்த போது லட்சக் கணக்கான நக்ஷத்திரங்களடங்கிய 20 லட்சம ஒளி மேகங்கள் தெரிந்தன.

ஆனால் இந்தத்தூரதர்சினியைவிட மிகப் பெரிதும் அதிகம் சக்தியுடையதுமான கண்ணாடி இப்போது செய்யப்பட்டு வருகிறது. இக் கண்ணாடி 200-அங்குல அளவுடையதாகும். அதன் கனம் மேலே சொன்ன ஹூக்கர் டெலஸ் கோப்பைப் போல் இரண்டுபங்கிருக்கும். மொத்தக் கண்ணாடியின் (சுற்றுப்புற இயந்திர அமைப்பும் சேர்ந்து) எடை 30 டன். அதன் நீளம் 17-அடி. அதனை அமைப்பதற்காக உபயோகப்படுத்திய பொருள் இறுக்கப்பட்ட பளிங்குக் கல்லாம். இக் கண்ணாடி வழியாகப் பார்த்தால் சாதாரணமாக ஐந்தில் ஒரு அங்குலம் குறுக்களவிருக்கின்ற கிருஷ்ண விழி (கண்ணில் நடுவில் மிகக் கறுப்பாக காணப்படும் புள்ளி. அதன் வழியாகத்தான் பார்க்கிறோம். அது சக்தியிழந்தபோதுதான் கண் குருடாகி விட்டதென்று சொல்லிக் கொள்ளுகிறோம்.) 9-அடி அகலமாகிவிடும். வெறுங் கண்ணால் பார்த்தால் தெரிவது போல 4 லட்சம் பங்கு சக்தியுள்ள வெளிச்சம் தெரியும். இதன் வழிப் புகைப்பட மெடுத்தால் லட்சக் கணக்கான ஒளி வருடங்கட்கு அப்பாலிருக்கும் 15000 லட்சம் நக்ஷத்திரங்கள் கூடத் தெரியும்.

---

### இடமும் பணமுமில்லாததினால் 20-கைதிகளுக்கு விடுதலை.

பண முடையாலும் பர்மா சிறைகளில் இடமில்லாததினாலும் சமீபத்தில் ரங்கூன் செண்டிரல் ஜெயிலிலிருந்து 500 பேர் விடுதலை செய்யப்பட்டனர்; இன்சீன் செண்டிரல் ஜெயிலிலிருந்து 120 பேர் விடுதலை செய்யப்பட்டனர். விடுதலையடைந்தவர்கள் குற்றஞ் செய்தலையே தொழிலாக உடையவர்களன்று. அற்பக் குற்றங்களுக்காக தண்டிக்கப்பட்டவர்களே இவர்களில் பெரும்பான்மையோர்கள்.







# விஞ்ஞான வளர்ச்சி.

### பறக்கும் "டாங்க்" அமெரிக்கர் முயற்சி.

டாங் என்பது மோட்டார் போன்ற இயந்திர அமைப்போடு யுத்தத்திற்காக உபயோகிக்கப்படும் ஒருவிதபோர் வண்டி. அதன் மேற்பாகம் நன்றாக மூடியிருக்கும். டாங்கிற்கு பள்ளத்தாக்குகளை குதித்துத் தாவிச் செல்லவும் அதிக விரைவாகப் பகைவர்களைத் தாக்கவும் முடியும். அதனுள்ளில் உட்கார்ந்திருக்கும் மனிதர்களை எவராலும் அழித்துவிடமுடியாது. டாங்கு பகைவர்கள் கூட்டத்திற்குள் புகுந்ததும் திடீரென மேல்மூடியை (பலபாகங்களாக) த்திறக்கிறது. திறந்த மறுகணமே அதற்குள்ளிருக்கும் பல மெஷின் துப்பாக்கிகள் நாலாபாகங்களையும்நோக்கிப்பாய்கின்றன.

இந்தப் பயங்கர வண்டியை 1914முதல் 1918வரையிலும் நடந்த யுத்தத்தின்போதுதான் ஐரோப்பியர் செய்தனர். முதல் முதலாகச் செய்வதற்குக் காரணம் பகைவர்கள் ஓரிடத்திலிருந்து இன்னொரிடத்துக்குப் போகையில் வழியில் முட் கம்பிகளைப்போட்டும், பெரிய பள்ளங்களைத் தோண்டியும் தடை செய்ததால் அவற்றிலிருந்து தப்பும் மார்க்கமாகவே டாங்கைச் செய்தனர். இந்தப் பயங்கர இயந்திரம் இப்போது பல தேசப்படைகளில் காணப்படுகின்றன.

ஆனால் அமெரிக்கர் தற்போது இதனை புதிய முறையில் கட்ட முயன்று வெற்றி பெற்று விட்டார்கள். அதாவது அவர்கள் கட்டிய டாங்கில் ஆகாய விமான அமைப்பு மிருப்பதால் அதனால் பறந்து செல்லவும் முடியும். உலகமெல்லாம் ஆயுதக் குறைவைப் பற்றி யோசிக்கையில் அமெரிக்க பறக்கும் டாங்க்சைக் கட்டுவது ஒரு விந்தையாம். இந்த டாங்கை சாகாவரமும் இறகும் பெற்ற சர்ப்பத்துக்கு சமமாகக் கூறலாம்.

ஆனால் ஆங்கிலேயர்கள் அதனை அவ்வாறு நினைக்கவில்லை. ஏனெனில் டாங்குகள் 20 டன் களுக்கு மேல் எடையிருந்தால்தான் துன்பம் செய்யக் கூடுமாம். இந்த அமெரிக்க டாங்கு 4 டன்தான் கனமிருக்கிறது. ஆகவே பிரிட்டிஷார் கருத்துப்படி அது ஒரு விளையாட்டுப் பொருள் அல்லது ஒரு "சமாதானப் பறவை".

### சிமண்டு குழாய்க் கிணறு

திரு. அமரநாத் என்ற இந்திய குழாய்க் கிணறு நிபுணர் பல வருடமாக எடுத்துக் கொண்ட முயற்சியின் பயனாய் உலகில் எவராலும் இதுவரையிலும் கண்டு பிடிக்க முடியாத சிமண்டு குழாய்க் கிணற்றைக் கண்டு பிடித்திருக்கிறார். இந்த சிமண்டுக் குழாயில் எவ்விதமான உலோகப் பொருள்களும் அடங்கியிருக்க வில்லை. இதுகாறும் அமெரிக்காவிலிருந்து வந்து கொண்டிருந்த இருப்புக் குழாய் கிணறுகள் இனிமேல் நின்று விடுமென்று எதிர்பார்க்கப் படுகிறது. திரு. அமரநாத் தம் குழாய் கிணற்றை அரசாங்கத்தில் பதிவுசெய்திருக்கிறார்.

### அலுமினியத்தின் கெடுதி.

அலுமினியப் பாத்திரம் உபயோகிப்பது சர்வ சாதாரணமாகி விட்டது. பலர் அப்பாத்திரங்களால் தீமை யேற்படுகின்றதென்றும், பலர் தீமை யில்லையென்றும் கூறுகிறார்கள். இந்த விவாதத்தை 1886-ம் வருடம் வியம் என்பவர் பரிசீலனை செய்து பார்த்தார். பரிசீலனையில் 30 அல்லது 40 கிரையின் அளவு கொண்ட அலுமினியத்தை மனித தேகத்துக்குட் செலுத்துவதால் எவ்விதத்திலும் தேகத்துக்கு பாதகமேற்படுவதில்லை யென்றும் ஆனால் அந்த உலோகம் தனியாக சருமத்தின் வழியாக வுடலுக்குள் புகுந்தால் கேடுண்டாகின்ற தென்றும் தெரிந்தது. இம் முடிவு பிற்காலத்து ரசாயன சாஸ்திரிகள் பலராலும் வற்புறுத்தப் பட்டது. 1914-ல் அமெரிக்கரும் இவ்விஷயம் பற்றி ஒரு போர்டு நியமித்து ஆராய்ச்சி செய்தார்கள். அப் போர்டாரும் மேற்சொன்ன கருத்தையே வற்புறுத்தினார்கள்.

### சத்தமில்லாத ரயில்வண்டி.

ஹாலந்துதேசத்தில், ரயில் வண்டிகள் அதிகமாக சத்தத்தை யுண்டுபண்ணி பிரயாணிகட்குத் தொந்தரவைக் கொடுப்பதால் அதனைத் தடை செய்யும்பொருட்டு, ஓசை யுண்டாகாத ஒருவித நூதனவண்டிகளைச்செய்தார்கள். ஆனால் ஹாலந்து வாசிகள் (டச்சு ஜனங்கள்) அதனைப் பொருது ஓசைதரும் வண்டிகளும் அசைந்தசைந்து செல்லும் பழைய வண்டிகளே வேண்டுமென்றனர். அதற்கு அவர்கள் கூறிய காரணம், புது வண்டிகள் ஓசையைக்கொடாததால் பிரயாணிகளின் பேச்சுச் சத்தம் தங்களை உறங்கவிடாது தொந்தரவு செய்கின்றதென்பதும், பழைய வண்டிகளின் அசைவு தொட்டிலில் படுத்திருப்பதுபோன்ற உணர்ச்சியைக் கொடுத்ததால் நன்றாக தூங்க வியன்றது வென்பதுமாம்.

### காற்றில்லாது அலை; சிறகில்லாது மீன்.

உலகில் படகு விசையில் முதன்மை பெற்றிருக்கும் செய்டான் என்பவர் மிஸ் இங்கிலாந்து III என்ற படகை நிமிஷத்துக்கு 2 மைல் விகிதம் லாக் லாண்டு என்ற ஏரியில் சமீபத்தில் ஓட்டிக்காட்டியது நேயர்கட்கு ஞாபகமிருக்கலாம். அந்த லாக் லமண்டு ஏரியில் காற்றில்லாமலே அலைகள் எழும்புகின்றன; மீன்கள் சிறகில்லாமலே இயங்குகின்றன. பல்லாயிரம் வருடங்களாக இவ்விசேஷத்தை பிரித்தானியர் கண்டு அதிசயமாகப் பேசிவந்தார்கள். பலர் பல கதைகளும் கூறிவருவதுண்டு. பழைய புராணமொன்று மேற்சொன்ன விரண்டும் கடவுளாணையால் நிகழ்வதென்று கூறிவிட்டு அந்த ஏரியில் ஒரு மிதக்கும் தீவு இருந்ததாகக் கூறுகிறது. இப்போது மிதக்கும் தீவை காண்பதற்கில்லை. சில நிபுணர்கள் அண்மையில் காற்றில்லாமல் அலைபெழும்புவதின் இரகசியத்தையும் மீன்கள் சிறகில்லாமல் எவ்வாறியங்குகின்ற தென்பதையும் பற்றி ஆராய்ச்சி செய்தார்கள். அதனால் சிறகில்லாமல் காணப்படுவை மீன்களல்ல வென்றும் விரியன் பாம்புகள் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்வதையே முன்னோர்கள் கண்டு கதைகட்டி விட்டார்களென்றும், அலை சதா விருப்பதற்குக் காரணம் இயற்கைக் கொந்தளிப்பு என்றும் தெரிந்து கொண்டார்கள்.

### கலியுக நளன்.

சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு அதிசயகரமான இயந்திரம் சமய லியந்திரமாகும். அதில் நீங்கள் எந்தப் புத்தானை அழுத்துகின்றீர்களோ அதற்கேற்றபடியாகச் சிலநிமிஷக்கட்குள்ரொட்டிகளோ, சூடான காபியோ வெளிவருகின்றன.

இந்த இயந்திரத்தைக் கண்டுபிடித்தவர் வேறொரு இயந்திரத்தையும் செய்துள்ளார். அதிலும் புத்தானை அழுத்துவதற்குத் தகுந்தபடி முட்டையுடைக்கப் பட்டு, சமைக்கப்பட்டு, ஒரு பாத்திரத்தில் வெளி வருகின்றது; இன்றேல் பன்றி மாமிசத்தின் ஒரு துண்டு சமயல் செய்யப்பட்டு வெளியே வருகின்றது. சிலகால் மீனும் சமைத்து வருவதுண்டு.

### நவநாகரிக ரஸ்தா வமைக்கும் முறை.

ரசாயனக் கைத்தொழில் சங்கத் தலைவராகிய டாக்டர் R. H. பிக்கார்டு ரஸ்தாக்களமைப்பதில் ஓர் சீர்திருத்த முறையைக் கண்டுபிடித்திருக்கிறார். ரஸ்தாக்களில் பழுதேற்பட்டால் பழுதான பாகத்தை மட்டிலும் தோண்டி யெடுத்தல் போதாது என்றும், அடி மண்ணையும் சிலகால் அஸ்திவாரத்தையுமே தோண்டி யெடுத்துச் செப்பனிட வேண்டு மென்கின்றனர். இதற்காக அவர் சொல்லும் முறை நல்ல துணிகளை உபயோகப்படுத்த வேண்டு மென்பதாம். துணிகளை இடையிடையே போட்டு ரோட்டை அமைத்தால் வேண்டும் போது சுலபமாக மண்ணை எடுத்துவிடலாம். இந்த முறை செலவு அபிவிருத்திக்கும் ஏற்றதே. பண்டை நாளில் (ஆங்கிலப்)பெண்கள் 19 கஜம் துணியை உபயோகித்து வந்தார்கள்; இப்போது அது சுருங்கி 7 கஜமாகிவிட்டது. அந்த ஏழு கஜமும் பஞ்சினால் செய்த தன்று. பட்டும் ரேயாலிப்பட்டுமே விரும்பப்படுகின்றன.

---

# கடிதங்கள்.

## உப்பூர் பிரமோற்சவம்.

வெயிலுகந்த விநாயகர் ஆலயப் பிரமோற்சவத்துக்கு ஆவணி மீ 11உ துவஜாரோகணம் செய்யப்படும். 17உ ரிஷபவாகனம். 18உ பாரிவேட்டை. 19உ ரதோற்சவம். 20உ தீர்த்தவாரி. நாலாந் திருநாள் முதல் சங்கீதக்கச்சேரி, சதுர்க்கச்சேரி, கதாகாலட்சேபங்கள் நடைபெறும் என்று தேவகோட்டை ஜமீன்தார் அருணசலஞ் செட்டியாரவர்கள் அறிவிக்கிறார்கள்.

## நாட்டரசன் கோட்டை.

சென்ற 16-8-32உ இவ்வூரில் சுமார் மத்தியானம் மணி ஒன்றரை முதல் சாயங்காலம் மணி 6வரை நடந்த ஓர் அதிசயச்செய்தி பின் வருமாறு:—

இவ்வூரிலிருக்கும் ஒரு கொத்தனார் பெண்ணைக் கூட்டிச்சென்ற சுந்தரம் என்பவனையும் அவனுக்கு ஷெ பெண்ணை இவ்விடமிருந்து கடத்திக் கொண்டுபோக உதவிபுரிந்ததாகச் சொல்லும் ஆண்டி சுப்பையா என்பவனையும் அவன் வைப்பாட்டியையும் அம்பட்டனைக் கொண்டு மூவருடைய தலையையும் ஐங்குடுமிகவைத்தும், ஆண்டி சுப்பையா என்பவனுடைய ஒரு பக்கத்து மீசையை எடுத்தும் பலவிதமான எலும்பு எருக்க இலை மாலை போட்டும் முகத்தில் கரும்புள்ளி வெள்ளைப்புள்ளி போட்டும் நாட்டரசன் கோட்டை எல்லாத் தெருக்களிலும் ஏக ஜனக்கும்பலுடன் நகர்வலம் வந்தார்கள். இதை அறிந்து பொதுஜனங்கள் சிவகங்கையிலிருக்கும் அதிகார வர்க்கத்தினருக்குத் தெரியப்படுத்தச் சொன்னதின்மேல் செய்கைநடந்த மறுதினம் ஷெ அடையாளங்களுடன் சிவகெங்கை போலீசுக்கு அறிவிக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது.

—ஒரு நிருபர்.

## நெய்குப்பை பாலசுப்ரமணியன் பந்தடிமால்

### படிப்பதுராமாயணம் இடிப்பது பெருமாள் கோவில்.

(ஒரு நிருபர்.)

மேற்கூறிய பந்தடிமாலின் சொந்தக்காரர்களால் நடத்தப்பட்ட புட்பால் லீக்ஸ் டோர்ணமெண்டில் நாளது ஆகஸ்ட்மீ 24உ மாலை 5 மணிக்கு ஆ. தெக்கூர் சரஸ்வதி விலாஸ் டீமும் திருப்பத்தூர் விளையாட்டாளர்கள் அடங்கியநெய்குப்பை பாலசுப்ரமணியன் என புனைப்பெயர் கொண்ட டீமும் கலந்து விளையாடின.

கதர், கதர், என மேடைதோறும் ஏறிப் பிரசாரம் செய்து, பேப்பர் தோறும் கட்டுரை எழுதித் தான் மாத்திரம் அன்னிய ஆடையில் அவாவுறுதல் போல, அறிக்கையில் தனவைசிய நாட்டில் வசிக்கக் கூடியவர்கள் மாத்திரமே இப்போட்டியில் கலந்துகொள்ள வேண்டும் என அச்சிட்டு ஊர்தோறும் அச்சுப்பிரதிகள் வழங்கிய இப்பந்தடிமால் காரியதரிசி திரு. தியாகராஜன் அவர்கள் தனது சொந்த ஊரார் ஜெயிக்க வேண்டும் என அவாவுற்று, திருப்பத்தூரையும் தனவைசியர்கள் வசிக்கும் ஊர்களுடன் தொன்னூற்று ஏழாவது ஊராகச் சேர்த்துக் அங்கு இருந்துவந்த விளையாட்டாளர்களையும்போட்டியில்கலந்துகொள்ள அநுமதித்ததற்கு இரங்காதிருக்க முடியவில்லை. நமது பாலசுப்ரமணியன் பந்தடிமாலின் அங்கத்தவர்கள் செவ்வையாக நிர்வாகம் செய்யக் கூடிய காரியதரிசியும் நிர்வாகஸ்தர்களும் எத்தனையோ நண்பர்கள் இருக்க அவர்களை விடுத்து இதுபோன்ற காரியதரிசியையும் நிர்வாகஸ்தர்களையும் தேர்ந்தெடுத்திருப்பது வருந்தத் தக்கதே.

## பாரதி வாசகசாலையின் திறப்பு விழா.

நாட்டரசன்கோட்டை— ஆவணி 11— மேற்குறித்த வாசகசாலையின் திறப்பு விழா இன்று மாலை 4 மணி அளவில்ஆரம்பித்தது. பல பிரமுகர்கள் விஜயஞ் செய்திருந்தனர். திறப்பாளர் கீழச்சிவற்பட்டி திரு. சாண்டோ லெ. சோமசுந்தரனார் அவர்கள், வாசகசாலையைத் திறந்து வைக்கு முகத்தான், பாரதியாரின் பெருமையையும், அரிய குணங்களையும் தமிழுலகிற்குச் செய்திருக்கும் ஒப்பற்ற பணியையும் பற்றி மிக விரிவாகச் சொல்லிவிட்டு வாசகசாலையைத் திறந்து வைத்தார்கள். திறப்பு விழாத் தலைவர் திரு. மு. செ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் பேசுகையில், நமது நகரில் இதற்கு முன் பல ஸ்தாபனங்கள் தோன்றி மறைந்தன வென்றும், அதற்கெல்லாம் காரணம் பொது மக்களின் ஆதரவின்மையே என்றும் இப்போது நமது இளைஞர் பலர் ஒன்றுகூடி மறுபடியும் இந்த ஸ்தாபனத்தை ஆரம்பித்திருப்பது போற்றத்தக்கது என்றும் இதற்குப் பொது மக்கள் ஆதரவளிக்க வேண்டியது மிக அவசியம் என்றும் வலியுறுத்தினார்கள். பின்னர் திருவாளர் சாண்டோ அவர்களால் வாசகசாலையின் பயன்களைப் பற்றியும், அறிவு வளர்ச்சிக்கு உடல் நலன் இன்றியமையாத தென்பது பற்றியும் மிக விரிவாகப் பேசப்பட்டது. பிறகு தலைவரால் முடிவுரை மொழியப்பட்டு காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்றது. ஏற்கனவே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தபடி சாண்டோ அவர்களால் ஒவ்வொரு அங்கத்தின் தசைக்கட்டுகளையும் (Muscles Control) தனித்தனியே காண்பிக்கப் பெற்றது. பின்னர் குரூப் போட்டோ ஒன்று எடுக்கப்பட்டு கூட்டம் இனிது கலைந்தது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## நேமத்தான்பட்டி.

அழகியதேவி வாசகசாலை:—இதன் முதலாவது ஆண்டு இரண்டாவது கூட்டம் 23-8-32 மாலை 4-35 மணிக்கு திருநாவுக்கரசு வித்தியாசாலை மாணவர்களும், மீ. காசு. அவர்கள் பள்ளிக்கூட மாணவர்களும் கடவுள் வாழ்த்துக் கூற திருவாளர் மு. சி. ராம. பெ.அரு. அருணசலஞ்செட்டியாரவர்கள் தலைமையில் ஆரம்பமாகியது. தலைவர் முகவுரைக்குப் பின்னர் குறித்த காலந்தவறாமை என்பது பற்றித் திருவாளர் பழ. அண்ணாமலை செட்டியாரவர்களும், செட்டிமார் நாட்டு வாலிபர் கடமை என்பது குறித்து திருவாளர் சா. மீ. சிவப்பிரகாசஞ் செட்டியாரவர்களும், பெண்கள் முன்னேறுவது எங்ஙனம் என்பது விஷயமாக திருவாளர் சி. வீ. நாராயணன்செட்டியாரவர்களும்இனிமையாகச் சொற்பொழிவாற்றினார்கள். பின்பு சுபத்திரா கல்யாணம் என்பதைப் பக்கவாத்தியங்களுடன் திருவாளர் அரிகரய்யர் அவர்கள் காலட்சேபஞ் செய்தார்கள். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் சி. வீ. நா. நாராயணன் செட்டியரவர்கள் அனைவருக்கும் வந்தனோபசாரங் கூற, சந்தன தாம்பூலாதிகள் வழங்கப் பெற்றுக் கூட்டம் இனிது நிறைவேறியது என்று ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

## திரு. வி. ஓ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் சஷ்டிபூர்த்தித்தினக் கொண்டாட்டம்.

திரு. வ. ஓ. சிதம்பரம் பிள்ளையவர்களுடைய சஷ்டி பூர்த்தித் தினத்தில், தூத்துக்குடி நகரவாசிகள் என்னென்ன செய்ய வேண்டுமென்று தீர்மானிப்பதற்காக, 25—8—32 மாலை மணி 5-30-க்குத் தூத்துக்குடி "சுதேசிப் பொருட் காட்சிச் சாலை"க் கட்டிடத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. வக்கீல் திரு. ஏ. வீ. பால்நாடாரவர்கள் தலைமை வகித்தார்கள். இதனடியிற்கண்ட தீர்மானங்கள் ஏக மனதாக நிறைவேற்றப் பெற்றன.

வருகிற 3—9—1932 சனிக்கிழமை நமது ஊர் உத்தம தேசாபிமானியும், தலைவருமான திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளை யவர்களின் சஷ்டியப்த பூர்த்தி தினமாயிருக்கிறபடியால் அன்று தினத்தைத் தக்கவாறு கொண்டாடுவதற்கும், அன்னாருக்கு நமது நன்றியைச் செலுத்துவிப்பதற்கும் தகுந்த ஏற்பாடுகள் செய்யத் தம்முடன் மற்றவர்களைச் சேர்த்துக் கொள்ளும் அதிகாரத்துடன் 17 பெயர் கொண்ட கமிட்டியை இக்கூட்டம் நியமிக்கிறது.

இந்தக் கமிட்டிக்கு திரு. ஏ. வீ. பால் நாடாரவர்கள் தலைவராகவும், திரு. ஏ. மாசில்லாமணிப் பிள்ளையவர்கள் காரியதரிசியாகவும்தெரிந்தெடுக்கப் பட்டார்கள்.

திரு. பிள்ளையவர்கள் சஷ்டி பூர்த்தி தினக் கொண்டாட்டத்தில் ஒரு பொதுக் கூட்டம் கூட்டுவதும், பிள்ளையவர்களுக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுப்பதும், ஒரு பண முடிப்பு அளிப்பதும் கட்டாயம் செய்யப்பட வேண்டியவை.

பிள்ளையவர்களின் சஷ்டி பூர்த்திப்பண முடிப்புக்குப் பணம் கொடுக்க விரும்புவோர்கள் ஷெ கமிட்டி மெம்பர்களில் யாரிடத்திலாவது செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம். பணம் கொடுப்பவர்களின் பெயர்களும் தொகைகளும் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படும் என்று ஷெ காரியதரிசி அறிவிக்கிறார்.



(3-ம் பக்கத் தொடர்ச்சி)

வணிகர் என்றால் அது சாதாரணமல்ல செல்வத்தால் நிறைந்த வணிகர், கல்வியில் நிறைந்த வணிகர், தர்மத்தால் நிறைந்த வணிகர், அறிவால் நிறைந்த வணிகர், திறமையால் நிறைந்த வணிகர், வட்டிக்கடைக் கணக்கில் நிறைந்தவணிகர்......................இப்படிச் சொல்லிக் கொண்டேயிருந்தார். இரவு 10 மணி ஆகிவிட்டது. ஜனங்கள் ஒவ்வொருவராகவும் கூட்டங் கூட்டமாகவும் கலைந்து போய்விட்டனர் கடைசிவரை அவர் பேசின விஷயம் ஒருவருக்கும் தெரியவில்லை.

அஞ்சா நெஞ்சன்.



# குடியரசும் சர்வாதிகாரியும்.

(ரிச்சார்டு நார்ட்டன் எழுதுவது)

இயேசுநாதர் பிறப்பதற்கு முன்பு ஜனங்கள் குடியரசு குடியரசென்று புலம்பிவந்தார்கள். உரோமர்களும் கிரேக்கர்களும் ஜனங்களால் ஆட்சி செய்யப்படும் அரசாங்க முறையை பட்டணங்கட் களித்தபோது பெரிய தத்துவ ஞானிகள் (வேதாந்திகள்) அதுபற்றிப் பலவாறு விவாதம் செய்தார்கள்.

தத்துவம் பேசுவதும் அரசாளுவதும் இரண்டு வித்தியாசப்பட்ட விஷயங்களாகும். பெரிய கிரேக்கச் சட்டஞானியாகிய லைகர்கஸ் என்பவரிடம் ஒருகால் அவர் ஏன் சமதருமத்தை விழைகின்றார்; ஏன் குடியாட்சியை விரும்பவில்லை என்று கேட்கப்பட்டபோது "உங்கள் வீட்டில் குடியாட்சியை ஏற்படுத்துங்கள்" என்று பதில் கூறினார்.

கடந்த நூற்றுக் கணக்கான வருடங்களாகக் குடியாட்சிபரிசோதிக்கப்பட்டு வருகிறது. இன்று உலகம் ஆப்ரகாம் லிங்கன் சொன்னவாறு "ஜனங்கட்காக ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டஜனநாயகம்" என்ற தத்துவத்தை யெப்புக்கொண்டுவிட்டது.

இதுகாலை உலகம்முழுவதையும்சுற்றிப்பார்ப்பவன் கேட்கும் ஒரே கேள்வி உலகம் ஜனநாயகத்துக்குப் பக்குவம் அடைந்துவிட்டதா? ஜனநாயகம் மக்களுக்கு ஏற்றதுதானா? என்பதேயாகும்.

உலகில் எல்லா நாகரிக நாடுகளிலும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஓட்டுரிமையிருக்கின்றது. சில நாடுகளில் பெண்கள் புருஷர்களைப்போன்ற சமவுரிமையோடு ஓட்டுக்கொடுக்கின்றார்கள். அவர்கட்குத் தங்கள் அரசாங்கத்தை விரும்பிய வண்ணம் அமைத்துக்கொள்ள உரிமையிருக்கின்றது. அதோடு நினைத்தவரை அதிகாரத்துக்குக் கொண்டுவரவும் சக்தியிருக்கின்றது.

## குடியாட்சி அபிமானம்.

குடியாட்சியில் ஸ்தானம் பெற்றவர்கள் உண்மையான குடியாட்சிக்கொள்கையுடையாரைப் போல ஜனங்களிடம் "நாங்களே உங்கட்கு உரிமைகளை வழங்கினோம். ஏதேனும் செய்யுங்கள்" என்று சொல்லுகின்றார்கள். அப்பால் அவர்களுடைய வேலைகளிலேயே கண்ணுங் கருத்துமாக விருந்துவிடுகின்றார்கள்.

பொது ஜன வுணர்ச்சி என்பது இறந்து போகும் தன்மையுடையதாகும். அது மக்கட்கு ஒரு பொறுப்பைக் கொடுத்துத் தேர்தலை நடத்திய பின்னர் அவர்களைக் கொண்டு தேர்ந்தெடுக்கப் பெற்றோரை குறை கூறச் செய்கின்றது.

பண்டை நாளில் புலவர்களும், வேளாளரும், பிரபுக்களும், அறிஞர்களும் குடியாட்சியினியல்பினை நன்றாகப் பரிட்சித்துப் பார்த்துவிட்டு ஒரு முடிவுகட்டி விட்டார்கள். சார்லஸ் டிசெடான் டாட் என்பவர் அடியில் வருமாறு கூறினார்:—குடியாட்சி யபிமானமென்பதற்கு மக்களின் சமவுரிமையில் அபிமானம் காட்டுவதென்பதே பொருளாகும். ஆனால் உண்மையாக வருந்தி வருந்தி உயிர்வாழ்கின்ற மக்கள் மீது எந்தக்குடியாட்சி யபிமானியாவது இரக்கம் காண்பிக்கின்றானவென்பதுதான் பெரிய சந்தேகமான விஷயம். ஒரு ஜனசமுதாயம் முழுதும் கடவுள்களாக விருந்தால் மட்டிலுந்தான் குடியாட்சித் திட்டம் பயன்படும். அப்படிப்பட்ட அரசாங்கத்தை யெங்குங் காணமுடியாது.

இதன் கருத்து உலகம் பூரணத்துவமடைந்த பிறகு தான் குடியாட்சி வெற்றியளிக்கு மென்பதாகும். ஆகவே நாம் பூரணத்துவத்திற்காகப் பாடுபடவேண்டும். அதுவே நமது கடமையும் வேலையுமாகும். சில கால் நாம்சுருங்கியகாலத்தில் அளவுகடந்து முன்னேறி விட்டதாகவும் தற்காலக் கொள்கைகட்கு நாடு ஏற்றதல்லாமலிருப்பதாகவும் காண்கின்றோம்.

## ஓட்டுச் செய்வதில் குழப்பம்.

உலகம் மிகவும் குழம்பியிருக்கிறது. வஞ்சகம் கொலைகளவு ஆகியவைகளால் நிறைந்திருக்கின்றது. மூடக் கொள்கைகளும் நிரம்பிவிட்டன. இந்த நிலைமையில், மக்கள் தற்போது அவர்களுடைய ஓட்டுகளை உபயோகிக்கின்ற முறையில்,உங்களால் எவ்வாறு குடியாட்சியைப் போதனை செய்ய முடியும்? பிரௌன் என்கின்ற ஒருவர் ஒரு லிபரல் கட்சியைச் சேர்ந்தவர் அழகாயிருக்கின்றாரென்பதற்காக அவருக்கு ஓட்டுக்கொடுக்கிறார். ஸ்மித் என்பவர் ஒரு கன்ஸர்வேட்டிவ் கக்ஷிக்காருடைய மனைவி அழகாயிருக்கின்றாளென்பதற்காக அவருக்கு வோட்டுச் செய்கிறார். மிஸஸ் ஹயிட்டு தன் காதலன் தொழில் கக்ஷியைச் சேர்ந்திருக்கின்றானென்பதற்காக அக் கட்சியாருக்கு வோட்டுக் கொடுக்கிறாள்.

இப்படியிருந்தும் இந்த ஆட்சி, குடியாட்சி என்று சொல்லப்படுகின்றது. இங்கிலாந்தி லிருக்கின்ற எல்லா மனிதர்கட்கும் ஓட்டுக்கொடுக்கு முரிமை உண்டு; என்றாலும் எத்தனை மனிதர்கள் தங்கள் கடமையின் கவுரவத்தையும் தாம் செய்வதின் கருத்தையும் உணர்கிறார்கள்? எலக்ஷனுக்குப் பிறகு எத்தனை பேர்கட்கு "நான் என் கடமையைக் குறைவறச் செய்து முடித்து விட்டேன்; நாட்டின் தேவையை நன்கு ஆராய்ந்து பார்த்து அதனை நிறைவேற்றி விட்டேன். நான் எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடந்து விட்டேன்" என்று உண்மையாகக் கூற முடியும்?

ஒருவரேனும் தங்கள் கடமையை உணர்வதில்லை. நான் அவர்களால் ஏலாதென்றே சில கால் நினைத்ததுமுண்டு. ஏனெனில் அவர்களுடைய மனம் உலகின் தேவைக்குத் தகுந்தபடி அமைக்கப்படவில்லை. அவர்களுடைய சிறிய ஜீவித வட்டம் குடியாட்சிக்குத் தகுந்தவாறு அமைக்கப்படவில்லை.

## சிக்கனம் தேவை.

குடியாட்சி என்றால் சமத்துவமென்பது பொருள். உலகம் முழுதும் சமத்துவமாக வாழவேண்டுமானால் எல்லோரும் பொதுவாக வோர் சிக்கன வாழ்க்கை வாழப் பழகிக் கொள்ள வேண்டும். உலகில் எல்லோருக்கும் போதுமான செல்வமும் அழகுமில்லை. குடியாட்சியை ஏற்றத்தாழ்வுக்கும் சண்டைக்கும் தரித்திரத்துக்கு மாளாக்கிக்கொண்டால் அதுஒரு தோல்வியேஎன்பதில் சந்தேகமில்லை.

## முசோலினி

காரிபால்டியும் அவருடைய செஞ்சட்டை வீரர்களும் இத்தாலியாவை பற்பல சிற்றரசர்களின் கொடுங்கோலி லிருந்து விடுவித்து, அதனை ஒரு வருக்கம் (nation) ஆக்கினர். ஆனால் இன்று அங்கு குடியாட்சியென்பது குனிந்த தலையோடு பதுங்கி வாழ்கின்றது. அங்கு காரிபால்டியின் கனவுக் கெதிராக, குடியாட்சித் தருமத்திற்கு மாறாக, எல்லாமனிதரும் சமமாய் வாழவேண்டுமென்ற கொள்கைக்குமாறாக இன்று ஒரு முசோலினி இருக்கின்றார்.

சமீபத்தில் இத்தாலியாவிலிருந்து திரும்பி வந்த எனது நண்பர் ஒருவர் புதிய ஆட்சியைபற்றிப் பற்பலவாறு புகழ்ந்தார். முசோலினி கட்டியபுதிய அரசிய லென்னும் கட்டிடத்தின் கீழ் உழைப்பும் திறமையும் ஆதலால் மகிழ்ச்சியும் இருக்கின்ற தென்பது அவரது அபிப்பிராயம்.

ஒரு காலத்தில் வண்டித் தடங்களாயிருந்தவைகளெல்லாம் இப்போது பெரிய ராஜ பாதைகளாயிருக்கின்றனவாம். ரயில் வண்கள் சமயப்படி ஓடி பிரயாணிகட்கு மிகுந்த வசதியைக் கொடுக்கின்றனவாம். இத்தாலிய சமுதாயம் முழுதும் பள்ளிக்கூடத்திலுள்ள வகுப்புமாணவரைப்போல வேலை செய்யவும் திருப்திப்படுத்தவும் தயாராயிருக்கின்றதாம்.

முசோலினி என்றால் குடியாட்சி என்பதற்குஎதிர் மொழியே. அவர்தம் நாட்டில் கொடுங்கையுடனேயே நடந்து வருகிறார். ஆனால் அவர் எவ்விதமான கைமாறையும் எதிர் பார்ப்பதில்லை. அவருடைய இத்தகைய ஆவேசம் கடந்த யுத்தத்தின் பிறகு இத்தாலியா அடைந்திருந்த பாமமோசமான நிலைமையைக் கண்ட பிறகே உற்பத்தியானது. இன்று அவர் தம் நாட்டு மக்களை தொழில் புரியும் ஓர் சமுதாயமாகச்செய்து விட்டார். இது குடியாட்சியின் தோல்வியைக் காட்டுவதற்குப்போதுமான சான்றல்லவா?

## குடியாட்சி செய்வதென்ன?

அமெரிக்க வாசியாகிய மிஸ்டர் கோர்டன் செல்பிரிட்ஜ் என்பவர் குடியாட்சியால் ஏற்படும் தீமைகளை நன்றாக உணர்ந்திருக்கிறார். அவர் கூறுவதாவது:—குடியாட்சி ஒருபோதும் நல்லூக்கத்தை யளிப்பதில்லை; ஒருபோதும் மக்கட்கு உதவி செய்வதில்லை; எங்கெங்கு இயலுமோ அங்கெல்லாம் தடையை யுண்டு பண்ணுகின்றது. அதோடு பிற்போக்கையுமளிக்கின்றது.

இத்தனையும் கூறிவிட்டு அவர் இன்னும் நூறு அல்லது இருநூறு வருடங்கட்குள்ளாகக் குடியாட்சி யென்ற நாமமே ஒழிந்து விடுமென்கின்றனர்.

அமெரிக்காகுடியாட்சிஏற்பட்டிருக்கும் நாடுகளில் முதன்மை பெற்றதாகும். அத் தேசத்தில் உலகிலுள்ள எல்லா பகுதிகளிலிருந்தும் மக்கள் சென்று வசித்து வருகிறார்கள். அந்த நாடே குடியாட்சியின் குண குணங்களை எடுத்து வெட்ட வெளிச்சமாகக் காட்டப் போகிறது.

மிஸ்டர் செல்பிரிட்ஜ் ஒருகால் "நாங்கள் ஒரு தலைவரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றோம். அவர் நம்போதனையு மூக்கமுமளிப்பவராகவும் தன்னலமற்றவராகவு மிருத்தல் வேண்டும்" என்று கூறினர்.

## சர்வாதிகாரிகள்.

சர்வாதிகாரிகளிருப்பது அபாயகாமாகும். பெரும்பாலான சர்வாதிகாரிகள் அவர்களாளுகின்ற லட்சக் கணக்கான பொது ஜனங்களின் கண்ணுக்கும் பேச்சுக்கும் எட்டாமலே வாழ்கின்றார்கள். சதா அவர்களுடைய ஆட்சி பயம் நிறைந்த கொடுங்கோலாகவே இருக்கின்றது.

நான் முசோலினியை விரும்பவில்லை. அவர் லட்சக்கணக்கான மனிதர்களின் ஏக அதிகாரியாக இருந்து வருகின்றாரென்பது எனக்கு மிகுந்த வெறுப்பைக் கொடுக்கின்றது. சர்வாதிகாரிநிலை அரசாங்கத்தின் செவ்விய ஆட்சிக்கு மாறுபட்டதாகும். என்றாலும் நான் தற்போதிய உணர்ச்சியுடைய இத்தாலியாவைக் கண்ட ஒருவரை புகழ்ந்தே யாகவேண்டும். அவரை நாட்டுக்கு இன்றியமையாத ஒரு சக்தியென்று மதிக்கின்றேன்.

உலகம் இத்தகைய மனிதர்களை பெறுகின்றதென்றுணர மிகவும் சந்தோஷமடைகின்றேன். சூரியனையும் நக்ஷத்திரங்களையும் பார்த்துக் கணித்து இன்ன தேதியில் நன்மை வருகின்றது அல்லது தீமைவருகின்றது என்று புலம்பிக் கொண்டிருப்பதைவிட தம் நாட்டில் அவ்வப்போது எது தேவையோ அதனை துணிந்து வெற்றிகரமாகும்படிச் செய்கின்ற தன்மை இலேசானதல்ல.

முசோலினி ஓர் உறுதிவாய்ந்த மனிதர். அவர் தொழிலுக்காக பிறந்திருக்கிறார்.மக்களுக்குப் புதிய உணர்ச்சியையும் உயிரையும் கொடுத்திருக்கிறார். அவர்களை தம் குழந்தைகள் போல மதிக்கிறார். அவருக்கு எது தீமையானது என்று தோற்றுகின்றதோ அதனை உடன்திருத்திவிடுகின்றார். ஆனால் நன்மை பென்று தோற்றினால் எப்படியும் அதனை நிலை நாட்டாம லிருக்கப் போவதில்லை. இதைப்பார்த்தால் மிருகத்தன்மைவாய்ந்த ஆட்சிஎன்று கூறாமலிருக்க முடியாது. ஆனால் திறமையை நாடி எந்தெந்த சர்க்கார்கள் வேலை செய்யத் தொடங்குகின்றனவோ அந்தந்தச் சர்க்காரிலெல்லாம் மிருகத்தனம் கலவாமலிருந்ததில்லை.

குடியாட்சி தன்னை காப்பாற்றிக் கொள்ளப் பெரிதும் முயன்று பார்க்கின்றது. லாசேன் அரசியல் நிபுணர்கள் ஐரோப்பாவுக்கே கதிமோக்ஷ முண்டாக்கிவிட முயலுகின்றார்கள். தலைவர் ஹூவரின் ஆயுதபரிஹாரத் திட்டம்வரிச்சுமையால் வாடியும் இளைத்து மிருக்கின்ற உலகால் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததுதான்.

பலர் குடியாட்சி தோல்வியடைந்து விட்ட தென்று சொல்கின்றார்கள். ஆனால் அவர்கள் அவ்வாட்சி முறையை கண்டிக்கப் புகுமுன்பு சர்வாதிகார முறை யொழிந்த ஒரு நல்ல ஆட்சியை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். அப்பால் குடியாட்சியின் தீமையைப் பேசுவதே சால்புடைத்து.

